# மணிமாலை
# சண்டை நாடகம்





இதன் விலை ரூபா 1

அமரம்பேடு இராஜரத்தின முதலியார்

சென்னை மலர்மகள் பதிப்பு

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்



# மணிமாலன்

# சண்டை நாடகம்



மயிலை

திருவேங்கடமுதலியார் அவர்களிடம்

சர்வ சுதந்திரம் பெற்றது.



அமரம்பேடு. இராஜரத்தின முதலியார்

மலர்மகள் விலாச அச்சுக்கூடம்

சென்னை - 1.

ரிஜிஸ்டர் காபிரைட்] 1966 [விலை ரூபா 1

23. தாண்டவராயப்பிள்ளை வீதி.

## ரிஜிஸ்டர் காபிரைட் அறிவிப்பு



இதனால் சகலமானவர்களுக்கும் அச்சுக்கூடத்தின் அதிபர்களுக்கும்தெரிவிப்பது யாதெனில், "மணிமாலன் சண்டை நாடகம்" என்னும் இந்நூலை, சென்னை தாண்டவராயப்பிள்ளைவீதி 11-வதுநெ. வீட்டில் ஸ்தாபித்திருந்த வாணி விலாசம் பிரஸ் உரிமையாளர் மயிலை. திருவேங்கடமுதலியார் அவர்கள் சர்வ சுதந்தரத்துடன் தான் அச்சிட்டு தன்பேரால் ரிஜிஸ்டர் காபிரைட் செய்துகொண்டு விற்பனை செய்துவந்த இப்புத்தக காபிரைட்டை, அமரம்பேடு. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ் பூமகள்விலாச வச்சுக்கூடத் தலைவர்களில் ஒருவராகிய அ. முத்துவடிவேல் முதலியார்பேரால் கிரயத்திற்குப்பெற்று அச்சிட்டு ரிஜிஸ்டர் காபிரைட்செய்து வெளியிட்டு வந்ததை அடியிற்கண்ட நான் அச்சிட்டு மகாகனம் பொருந்திய அரசாங்கத்தார் சட்டப்படி என்பேரால் ரிஜிஸ்டர் காபிரைட்செய்து வெளியிட்டுள்ளேன். ஆகையால் இந்நூலை பிறர் அச்சிடுதல் கூடாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அ. இராஜரத்தின முதலியார்.

ஸ்ரீ

கிருஷ்ணசகாயம்

# மணிமாலன் சண்டை நாடகம்





குருவணக்கம்

### போற்றி விருத்தம்

வேதாந்தவேதாபோற்றி வேதசம்பன்னாபோற்றி
ஓதாதகல்வியெல்லாம் ஓதியேவைத்தாய்போற்றி
தாதாவேபோற்றிபோற்றி தயவருள்குருவேபோற்றி
பாதாரவிந்தந்தன்னை பணிந்துளமறவேன்போற்றி.

### பொது வசனம்

அகோதெப்படியென்றால், இவ்விதமாக இந்திரப்பிரஸ்தத்தைப் பரிபாலனம்செய்துவராநின்ற பாண்டுமகாராஜர்களுடைய குமாரர்களாகிய பஞ்சபாண்டவர் ஐந்து ராஜாக்களும் குருபரமகாரிஷியினுடைய வனத்திற்கு வருகிறவிதங் காண்க

### தருமர் சொல் விருத்தம்

பெரியதந்தை பெற்றெடுத்த செல்வரான
பெரும்பாவி துரியனவன் சகுனிசொல்லால்
தருமரையுந் தமையனென்று யோசியாமல்
தன்னுடைய பதிதனிலே வரவழைத்து
மருமமுடன் சூதாடி நகர்பறித்து
மாவனத்திற குடியிருக்க வந்தகாலை
திறமுடனே எழாண்டும் தொலைத்தபின்பு
சீரான மருவனத்திற் கொலுவதானார்.



### தரு

ராஜராஜேந்திரன் ராஜமார்த்தாண்டனை
ராஜன்கொலுவதாகினார் வெகுவேடிக்கையாக
ராஜன்கொலுவதாகினார்

தேசமன்னர்வந்து திருவடிவணங்கிட
நாசமொன்றில்லாமல் நகரையாண்டிட்டதீரன்
சுருள் நத்தியதுரியனும் பத்தியேகாட்டினில்
உத்தமரைவரும் பத்தினியாளுடன் ராஜ

இந்திரப்பிரஸ்தத்தில் இன்பமாயிருந்தோரை
அந்தத்துரியன்சகுனி அன்புடனேயழைத்து
சுருள் அண்ணலேயென்றைவர் குனியேதொழுது
எண்ணினவெண்ணம் முடிக்கவேநினைத்து ராஜ

வேடிக்கையானந்தமாக விளையாடுவோமென்று
ஆடுஞ்சதுரங்கத்தை அச்சபைதனில்வந்து
சுருள் அம்மானசகுனியால இம்மையில்கெலித்தவனை
தம்பியால்துரோபதை துகிலையும்உரித்தவனை ராஜ

பன்னிரண்டுவருஷம் பாரவனத்திலேகி
பதின்மூன்றாம்வருஷத்தில் பாரிற்காணாமற்றங்கி
சுருள் பட்டணம்வந்தாலே திட்டமாயுலகத்தை
இஷ்டமாய்த்தருகிறேன் என்றெடுத்துரைத்திட்ட ராஜ

தருமர் சொல் விருத்தம்



தம்பிமார்களேமுன்செய்த தவப்பயன்குறைவினாலே
அம்புவிவிட்டுநாமும் அடவியில்வந்துசேர்ந்தோம்
எம்பிரானருளினாலே ஏழாண்டுதொலைத்துவிட்டோம்
கும்பலாயிவ்வனத்தில் குணமுடனேகுவோமே.

வசனம்

கேளுங்கள் தம்பிமார்களே! பெண்ணே துரோபதா! நாம் முன்செய்த தீவினையாலே நமது நாட்டைவிட்டு காட்டில்வந்து துரியோதனன் சொற்படிக்குப் பனிரெண்டுவருஷத்தில் ஏழுவருஷமும் தொலைத்துவிட்டோம். இப்போது குருபர மகாரிஷியினுடைய வனத்திலிருந்து எட்டாவது ஆண்டு தொலைத்துவிட்டு மதுவனம் வந்துசேர்ந்தோம். நாமிருக்கத் தக்கதாக பர்னசாலை ஒன்று செய்யுங்கள், நாம் புசிக்கக் கனிவர்க்கம் கொண்டுவாருங்கள் தம்பிமார்களே.

சகாதேவன் சொல் விருத்தம்

தன்மமேபெரிதாயெண்ணும் தமையனேபாதம்போற்றி
வன்மமும்செய்துநம்மை வனவாசமோட்டிவைத்தான்
செம்மையாய்வசித்திருக்கச் சித்திரபர்னசாலை
இம்மையிற்செய்துவந்தோம் இணையடிசரணம்போற்றி.

வசனம்

கேளும் எனது தமையனாரே! உனது பாதாரவிந்தம் சரணம். நமது பங்காளியாகிய துரியோதனன் கபட வஞ்சகத்தினால் பன்னிரண்டுவருஷம் வனவாசம் ஓராண்டு அக்ஞாதவாசம் செல்லும்படி கானகம் அனுப்பிவிட்டபடியால் நாம் இந்தவனத்தில் சஞ்சரிக்கும்படி நேரிட்டது. தங்கள் உத்திரவுப்படிக்கு மகா விசித்திரமான பர்னசாலை ஏற்படுத்தினோம், கனிவர்க்கங்களும் கொண்டுவந்தோம், தாங்கள் புசித்து பசிதணியும் அண்ணாவே.

பொது வசனம்

இவ்விதமாக பஞ்சபாண்டவர்கள் கொலுவிருக்கும்போது துரோபதையம்மன் வனவேடிக்கைகளைப் பார்க்கும்படி சபைக்கு வருகிறவிதங் காண்க.



### துரோபதை சொல் விருத்தம்

சோலையிலோசைபாடுஞ் சொகுசுள்ளகுயிலைப்போலும்
காலையிலுதயமாகும் கதிரவனொளியைப்போலும்
வேலையும்பழிக்குங்கண்ணாள் விசித்திரமயிலைப்போலும்
சேலையும்பணிகளாடச் சிறப்புடன்வருகின்றாளே.

### தரு

சோதிப்பிரகாசமின்ன சொகுசாய்ப்பணிகள்துன்ன
சுந்தரதுரோபதையும்வந்தாள் மிகுஅதிகுணவழகி
சுந்தரதுரோபதையும்வந்தாள் தாதிமார்கள்சூழ

சுருள் தங்கப்பணிகளும் எங்கும்துலங்கிட
இங்கிதமானதோர் மங்கையர்சூழ சோ

காதினிற்பணிகள்மின்ன கதிர்மணிபணிதுன்ன
விதிபிலலைந்திட கோதையாளகூந்தலும்

சுருள் வித்தகியாகிய பத்தினிமாதிவள்
சத்தியமறவாத உத்தமிசாது சோ

பாஞ்சாலன்யாகந்தனில் பாலகியாயுதித்து
பார்த்தனைமாலையிட்டுமே அங்கேபார்த்தவர்கடுங்கிட

சுருள் பாண்டவரைவர்க்கும் பத்தினியாகவே
பக்ஷமாய்வனவாசம் துஷ்டமாசெய்து சோ

அந்தவனத்திலுள்ள அதிசயம்பார்க்கவென்று
சிந்தையாய்மனமகிழ்ந்து சிந்தைமிகக்களித்து

சருள் வேள்விழிமாதிவள் மன்மதன்தேவிபோல்
சேல்விழியென்றிடச் சித்திரப்பதுமைபோல் சோ

வேறு தரு

இந்தவனப்புதுமை யானுஞ்சென்று
இன்பமாய்ப்பார்த்திடுவேன்

குந்தியிருக்குதுபார் ஒருமயில்
கூவுதுபார் குயிலும்
மாடப்புறு அன்னங்கள் மரந்தன்னில்
மாங்கிளி கூவுதுபார்
தேடியறிந்ததில்லையே இந்தவனத்தில்
தேன்கிளி கூவுதுபார்
மாங்கனிவேர்பலாவும் அனேகமாய்
மணமுள்ள தேன்கனியும்
கோங்குபலாமுதலாய் செவ்வாழையும்
குணமுள்ள மாஞ்சுளையும்
இந்நதியைப்பாராய் வேடிக்கையாக
எங்கிருந்தெங்கே வருகிறதோ
கந்தமலர் பாரிஜாதபுஷ்பம்
கரையில்ஒதுங்கியே போகுதுபார் இந்த

வேறு சந்தம்

இதுவென்ன பூமலரோ
இதவும்என்ன நதியோ
இதுவென்ன தபோதனர்கள்
இதுவென்ன அர்க்கியமோ
இதுவென்ன பரிமளந்தான்

வசனம்

கேளுங்கள் அம்மா தாதிமார்களே! இந்த வனத்தோரத்திலே நதியொன்று ஓடுகிறது, ஜலமானது பரிமளமிகுந்த வாசனையாகவும் இருக்கிறது. இதில் அநேக புஷ்பங்களும் கிடைப்பதற்கு அருமை யாகிய மந்தாரைமலர்களும் இந்த ஜலத்தில் அடித்துக்கொண்டு போகிறதே, இது என்ன வேடிக்கை, இது என்ன சிங்காரம் பாருங்கள் அம்மா சகிமார்களே.

தரு

என்ன அதிசயமோ இந்ததடாகமும் விந்தையாய்தோற்றுது
என்ன அதிசயமோ

புன்னைஇருவாட்சி புகழானமந்தாரையும்
இன்னமனேகபுஷ்பம் இதோநீரில்போவதைப்பார் இது

மணமும்மிகுதியாகுதே இதிலத்தர் சவ்வாதுகள்புனுகதுபோலவே
மணமுமிகுதியாகுதே
குணமுகனர்செய்யும் குருசுவாமிபூசையோ
வனமதில்ஆறுத ஏகப்பெருவெள்ளமாய் இது

என்குணம்இதின்மேல் ஓடுதே நீரில்போகிறமலர்
என்குணம்இதின்மேலோடுதே
மனதுசந்தோஷமாக மலர்பறித்தேவாரீர்
மதவீமனோடுசொன்னல் மயங்காமலேதருகுவார் இது

பொது வசனம்

இவ்விதமாகப் பாஞ்சாலியம்மன் கானகத்திற்சென்று வன வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டுவருகையில் அவ்வனத்தோரத்தி லிருக்கும் காவேரியாற்றில் மந்தாரைமலர்களை அடித்துக்கொண்டு போவதைக்கண்டு சந்தோஷித்து தனது பிராணநாயகராகிய வீம சேனனை நினைக்க வீமசேனன் துரோபதையைக் காணும்படி வருவது.



வீமன் சொல் விருத்தம்

அண்டமும்நடுநடுங்க அமரர்கள்மனமொடுங்க
கண்டவர்பயந்துவோடக் கருமலைநடுங்கிசாடத்
தெண்டுமேகைபிலேந்தித் திசையெல்லாமதிரத்தாண்ட
வெண்டயம்காலிலாட வீமனும்வருகின்றானே.

தரு

வீரதீரமும்பெற்ற விளங்கும்சந்திரகுலோசன்
வீமசேனனிதோவந்தான் வெகுதானமுகசூரன்
வீமசேனனிதோவந்தான்

தீவிரமாகவே தெண்டாயுதம்பாலா
சுருள் திரமுடன்பொற் கரமதிலிலங்கிட
அரமுடன்பணிகளும் கலகலவென்றிட வீர

மந்தரகிரியைப்போல் மார்பிற்பதக்கமின்ன
மகிழும்பணிதுலங்கவே வெகுவிந்தையாக
மகிழும்பணிதுலங்கவே

சிந்தைமிகக்களித்து செழித்துகெக்கலிகொட்டி
சுருள் தீரவீரர்கள் கண்டுநடுங்கிட
ஆங்காரமுடன் அண்டங்கள்நடுங்க வீர

கருமலைப்போலவே கறுத்ததேகமுடனே
கையில்கெதைவாளெடுத்து கண்டவர்நடுங்கிட
கையில்கெதைவாளெடுத்து

காணுமிருகமெல்லாம் கலங்கி அப்புறமோட
சுருள் கண்களும்தீயெழ மண்களும்பறக்க
கணபூதபேதமும் கரமதைக்குவிக்க வீர

துரியன்செய்தவஞ்சகத்தாற் றுலைப்பேனவனையென்று
துய்யசபையிற்சொன்னவன் வெகுமன்னவரறிய
துய்யசபையிற்சொன்னவன்

துலைக்காமலவனைநான் தொட்டுஜலமருந்தேன்
சுருள் தொப்பெனஜலமதை செந்தையினலடித்து
அப்பவேயிமிர்ந்துநீர் அருந்துவேனென்று வீர

துரோபதை சொல் விருத்தம்

இன்னகரிடும்பாசூர னெதிரிலாபக்காசூரன்
தன்னையேகொன்றுவென்ற தாஷ்டிகவுன்பாதத்தை
இன்னிலயந்தனில்யானு மின்பமாகத்தொழுதேன்போற்றி
கன்னியான்முடித்துவந்த காரியம்முடிப்பீர்மன்னா.

வசனம்

சரணம் சரணம் எனது பிராணேசா! உம்முடைய பாதார விந்தங்களுக்கு அனேக வந்தனம், அதுவன்றியும் நான் என்று

டைய மனதில் ஒரு காரியம் நினைத்திருக்கிறேன். அதை எவ்வித மாவது நிறைவேற்ற வேண்டுமையா சுவாமி.

வீமன் சொல் விருத்தம்

பாவையாளாகவேதான் பாஞ்சாலதவத்துதித்த
சோவையேயீயுமிந்தக் குவலயந்தன்னில்வாழி
மேவியேயீயுமிப்போ மேன்மையாய்நினைத்துவந்தசேதியை
தீவிரமாகவேதான் தெரிவிப்பாய்வாழிவாழி.

வசனம்

கேளும் பெண்ணே துரோபதா! நீ மகாராசியாக வாழக்கடவது உனது மனதில் நினைத்துவந்த சங்கதியை எனக்கு விபரமதாக தெரியச்சொல்லும் பெண்ணே துரோபதா.

துரோபதை தரு

மன்னவாயிவ்வனத்தில் மகிழ்ச்சியுடனே சென்றேன்
மலர்ஒன்றுபார்த்துவந்தேன் மன்னவரே

சுருள் மகிழ்ச்சியுடனெனக்கு மந்தாரைமலரைநீர்
மகிழ்ச்சியுடனே தந்தால் பூரிப்புடனிருப்பேன் மன்

வீமன் தரு

பெண்ணேநீசொல்லும்வார்த்தை பிரியத்தெரியவில்லை
பேதகமில்லாமல்சொல்வாய் பெண்மயிலே

சுருள் பிரியும்படிக்குயிப்போ தெரியவேயுரைத்தால்
அரிவையேமலர்தன்னை அன்புடனேயளிப்பேன் பெ

துரோபதை தரு

அகிலாண்டகாவேரி ஆறென்றுவருகுது
அதிலேமிதக்கிறது மந்தாரைபுஷ்பம்

சுருள் அடித்துவருகுது அன்பானபாரிஜாதம்
இடத்துடனளிப்பீரோ தேவிமனங்களிக்க அகி

வீமன் தரு

எங்கிருந்துவருகுதோ இறைக்கும்காவேரிஜலம்
இதுவென்னபுதுமையோ பெண்மயிலே

சுருள் இடறுகள்நேருமோ அடர்வனந்தனிலே
திடமுடனுரைப்பது நலமல்லபெண்ணே எங்

துரோபதை தரு

அந்தஆற்றினருகில் அடர்ந்திருக்கும்பூஞ்சோலை
அதிலிருக்குதேமலர் மன்னவரே

சருள் அடுத்துநீருமிங்கே திடத்துடனேகியே
எடுத்தளிப்பாய்மலரை எந்தன் மனமகிழ அந்த

வீமன் தரு

எந்தமகாமுனிவர் எடுத்தர்ச்சிக்குமலரோ
ஏகவொண்ணுதென் றன் பெண்மயிலே

சருள் எண்ணினயெண்ணமும் ஏர்க்காதடியுனக்கு
கண்மணியேயிதைக் கருத்தினில்நினைக்காதே எந்த

துரோபதை தரு

ஆராலுமாகாதென்று அறிவித்தேனும்மிடத்தில்
அதையும்நீயோசிப்பீர் மன்னவரே

சருள் அன்புள்ளமலரையென் அகமதுமகிழ
இன்பமதாகவே இக்ஷணம்தருகுவீர் ஆரா

வீமன் தரு

மானைத்தரவேசொன்னாய் மாண்டோமேநால்வர்களும்
மதிதானுனக்கில்லையோ பெண்மயிலே

சருள் மாங்குயிலேஅடி மாதரசேநீயும்
தேங்கியேவாடாதே தேவையில்லையேமலர் மானை

துரோபதை தரு

துரியன்செய்வஞ்சகத்தால் துலைக்கவேவனம்வந்தோம்
அரிமாயன்செய்தமாயம் மன்னவரே

சருள் அந்நாளில்மடிந்ததைச் சிந்தையில்நினையாதே
அருமலரையெனக்கு அன்புடனளிப்பீரே துரி

வீமன் தரு

மாங்கனியைநீகேட்க மாதேஅருச்சுனன் றன்னை
மடியும்படிநேர்ந்துதே பெண்மயிலே

சருள் மாயனலப்போது மடியாமற்பிழைத்தோமே
மாதேயிவ்வார்த்தையை மனதில்நினையாதே மா

### துரோபதை தரு

என்னசொன்னாலுங்கேளேன் எடுத்தளிப்பீர்மலரை
ஏதுவினைவந்தாலும் மன்னவரே

சருள் என்னுடையபதமையனும் வந்துமேகார்ப்பார்
உன்னுடையமனதில் மயக்கமும்வேண்டாம் என்

### வீமன் சொல் விருத்தம்

எந்தனுட தேவியரே சொல்லக்கேளாய்
எம்பெருமான் காப்பாரென்றுரைத்ததாலே
மந்தார புஷ்பமொடு பாரிஜாத
மலர்களெல்லாம் வகைவகையாய்க் கொண்டுவந்து
உந்தனுடன் மனமகிழ நானுமிப்போ
ஒருநொடிக்குள் தந்திடுவேன் அஞ்சவேண்டாம்
அந்தமுடன் நாமிருக்கும் பர்ணசாலைக்
கன்புடனே நீயேகி யிருந்திடாயே.

### வசனம்

கேளும் பெண்ணே துரோபதா! ஏதுவினைவந்தாலும் நமக்குத் துணைவராகிய கிருஷ்ணமூர்த்தி காப்பாரென்று சொல்லுகிறபடியால் இதோ ஒருக்ஷணத்தில் அந்த மந்தாரைமலரை கொண்டுவருகிறேன் பர்னசாலையிற்போய் பதனமாயிருப்பாய் பெண்ணே பிராண நாயகி.

### துரோபதை கவி

பாரெலாம்புகழும் பார்த்திபன் தமையா
நீருடன்மலரை சீக்கிரந்தருவீர்.

### வசனம்

கேளும் பிராணேசா! அந்த மந்தாரைமலரை எனக்குச் சீக்கிரம் கொண்டுவந்து தாருமையா சுவாமி.

### பொது வசனம்

அகோதெப்படியென்றால், வீமசேனன் பாஞ்சாலியினுடைய உத்தரவின்படி காவேரியாற்றில் போகும் மந்தாரைமலரைக் கொண்டுவரும்படியாகச் சம்மதித்திருக்கும்போது தௌமிய மகா முனிவர் வருவது.




தௌமியர் சொல் விருத்தம்

காவிகாம்பரமுந்தண்டுங் கமண்டலங்கையிலேந்தி
தாவியேசடைகுலுங்க சங்கரனெளிவிளங்க
மேவியேயீசன்பாதம் மேன்மையாமனதிலெண்ணித்
தீவிரசபைமுன்பாகத் தௌமியர்வருகின்றாரே.

தரு

தௌமியாச்சாரியரும் வந்தார் மிகுதபத்தினிலுயர்ந்த
தௌமியாச்சாரியரும் வந்தார்

தௌமியாச்சாரியரும்வந்தார் தண்டுகமண்டலமேந்தி
தங்கப்பணிதிகளும் அங்கமெல்லாங்குலுங்க தௌ

ஈசன்பதத்தைநிகம் நேசமுடன்துதித்து
பாசவினையகற்றும் ராசன்தர்மரைக்காண தௌ

காவிகாம்பரம்பூண்டு கையில்புலித்தோல்கொண்டு
கண்டவர்களெதிரில் தெண்டனிட்டேபணிய தௌ

தர்மர்வனத்தில்வந்து தபங்கிநின்றநாள்முதல்
நன்மைவசனங்களை நலமுடனுரைத்திட தௌ

தௌமியர் விருத்தம்

அன்புள்ளசீஷரேநாம் அறம்பெற்றதருமருக்கு
துன்பமாய்விடுதிவிட்டுத் தோன்றியமுதலாய்நாமும்

தெம்புகள்மிகவும்சொல்லித் தினமுமா றனித்துவந்தோம்
வம்பனுய்ச்சொல்லும்வீமன் வார்த்தையைக்கா னுவேனே.

வசனம்

கேளுமப்பா சிஷர்களே! கபடவஞ்சகனுகிய திரியோதிரன் சூதுமார்க்கமாய்ப் பாண்டவர்களைப் பனிரண்டுவருஷம்வனவாசமும் ஓராண்டு அஞ்ஞாதவாசமும் ஆக பதிமூன்றுவருஷம் கானகத்திற் சஞ்சரிக்கும்படி வனவாசம் ஓட்டினன். பாண்டவர்கள் கானகம் வந்தாள்முதல் அவர்களுடைய துயரத்தை மாற்றும்படி நாம் சில நீதி மார்க்கங்களை உபதேசித்துக்கொண்டுவந்தோம். இப்போது வீமசேனனனவன் ஏதோ ஒருகாரியார்த்தமாகப் போகிறபடியால் அவன் வெற்றிபெறும்படியாக ஆசிர்வதித்துவருவோம் வாருங்கள் அப்பா சிஷர்களே.

வீமன் சொல் விருத்தம்

ஆதிநாள்முதலாயெங்கள் அருந்துயர்தீர்த்துநீரும்
வேதனைவரவொட்டாமல் விபரங்களுரைத்துக்காத்தீர்
காதகத்துரியன்செய்த கபடெலாமறிந்தாய்போற்றி
ஆதரவாகயென்னை அன்புடன்காத்திடீரே.

வசனம்

சரணம் சரணமையா சுவாமி! எங்கள் குலகுருவாகிய தௌமியாச்சாரியரே! ஆதிநாள்முதலாக எங்களுக்கு துரியோதனனால் ஏற்பட்ட துன்பங்களை நிவர்த்திசெய்து பாதுகாத்து வருகின்ற மகா தவசிரேஷ்டரே! உமது பாதாரவிந்தகமலங்களுக்கு அநேகவந்தனம் வந்தனமையா சுவாமி.

தௌமியர் தரு

சந்திரகுலதருமருட தம்பிவீமசேனுவாழி
தைரியமுடனேசெல்லும் விதமதைநீயுரைப்பாய்

வீமன் தரு

மங்கைதுரோபதையவள் மந்தாரபுஷ்பமதை
மகிழ்ந்தென்னைக்கேட்டதினல் நான்தருவேனென்றேன்

தௌமியர் தரு

தருகுவேனென்றநீ தைரியமுடனெங்கே
தாண்டிநடக்கும்விதம் நீயுரைப்பாய்

வீமன் தரு

எங்கேயாகினுஞ்சென்று இச்சித்தபுஷ்பமதை
எடுத்தவட்களிப்பேனென்று நான்போறேன்

தௌமியர் தரு

அந்தரலோகத்திலும் அளகாபுரிதனிலும்
மந்தாரைபுஷ்பமது இருந்திடுமே

வீமன் தரு

எந்தவிதமாய்ப்புஷ்பம் என்னிடம்வருவது
எனக்குத்தெரியஅதை யுரைத்திடுவீர்

தௌமியர் சொல் விருத்தம்

அந்தரலோகந்தன்னில் அளகையாங்குபேரலோகம்
மந்தாரைமலருமங்கே மற்றவோருலகிற்காணோம்
தந்திரமணிமாலன்பேர் தனிக்கோட்டைகாவலோனைச்
சிந்துசிந்தாகவாட்டி சீக்கிரம்பறித்துவாராய்.

வசனம்

கேளுமப்பா வீமசேனா! மந்தாரைபுஷ்பமானது தெய்வலோகத்திலும் குபேரனுடைய பட்டணமாகிய அளகாபுரியிலும் அகப்படும். ஆகையால் நீ அளகாபுரிக்குச் சென்று குபேரனுடைய கோட்டை வாசலுக்கு அதிபதியாகிய மணிமாலனைக் கொன்று மந்தாரை புஷ்பத்தைக் கொண்டுவாருமப்பா வீமசேனா.

வீமன் வசனம்

அப்படியே போய்வருவேனையா ஸ்வாமி.

வீமன் தரு

நடந்தேனிதோபாரீர் மதவீமனும்வனமதைநோக்கி
நடந்தானிதோபாரீர்

நடந்தானிதோபாரீர் காடுகானகந்தன்னில்
அடர்ந்தமிருகமெல்லாம் அலறியப்புறமோட

சுருள் அந்தரவானவர் கண்டுநடுங்கிட
அருமுனிவோர்களும் ஆவென்றுதியங்கிட நட

சத்தசாகரக்கடல் தத்தளித்துமேசாட
சாரிவருங்கதிரைப் பாரிச்சேர்தூள்மறைக்க

சுருள் க்ஷணத்தில்மந்தாரையும் தருகிறேனென்று
கனமுடனெதிர்த்தோரைக் கண்டிப்பேனென்று நட

கையில்தெண்டாயுதம் கனத்தக்ஷணம்மின்ன
மெய்யில்அரியின்பாதம் மேன்மையுடனினைத்து

சருள் மீரியஅளகையிற் சாரியாசென்று
பாரியமந்தாரை தருகுவேனென்று நட

### பொது வசனம்

அகோதெப்படியென்றால், வீமசேனன் அளகாபுரியைநாடி வனாந்திரங்களில் நடக்கின்றபோது அந்தவனத்தில் வாசம்செய்து வாராநின்ற காளிகாதேவி வருவது.



### காளி சொல் விருத்தம்

வருபவனாரோவென்று வடிவாளுங்கரத்திலேந்திச்
சுரருடன்முனிவரெல்லாம் சருக்குடன்பயந்துவோடக்
கரமதிற்பிண்டிசூலம் கதாயுதம்இருப்புலக்கை
திரமதாய்பிடித்தேஉக்ரம தேவியும்வருகின்றாளே.

### தரு

உக்கிரதீர அகோரகாளிகைவந்தாள் உலகிலதிபதி பலரும்நடுங்கிட
உக்கிரதீர அகோரகாளிகைவந்தாள்

உக்கிரவீரகாளிவந்தாள் உலகிலுள்ளவர்பலரும்நடுங்கிட
கலகலென்றுமே வளையல்கொஞ்சிட
ஆரகேயூர மணிகளாடிட
அஷ்டபுஜங்களும் திகதிகென்றிட உக்

காலில்வெண்டயம் கலகலென்றிடவே எதிரில்வந்த
கனத்தமிருகங்கள் மனமும்நடுங்கிட
சூலம்சக்கரம் பிண்டிபாலமும்
சுற்றிலும்பூத கணங்கள்சூழ்ந்திட உக்கி

அந்தரவானவர் முனிவர்வரவொண்ணாத
எந்தன்வனத்தில் வந்தவனாரோ
கந்தமுங்கஸ்தூரிவாடைகள் கமகமென்றுவீசவே
சுந்தரபூதப்பிரேதங்கள் சுற்றிலும்வந்துவணங்க உக்கி

கண்டவர்மனம்நடுங்கிடவே உலகிலுள்ள
காவலர்கள்வந்து நாடிடவே
மண்டலங்களும் எண்டிசையெல்லாம்
மடமடவென்றுதா னதிர்ந்திட
தொண்டுசெய்துமே நாடகந்தன்னை
பாடினேன்துயர் தீர்ப்போமென்றுமே உக்கி




காளி கவி

துதிபெருமுலகந்தன்னில் தொண்டர்கள்தவிரவேறே
அதிபதிவந்ததில்லை ஆரடாநில்லும்நில்லும்
பதிவிட்டுவந்ததாலே பற்றியேஉன்னைவாட்டி
சதைசதையாகவுன்னை சாடுவேனறிந்திடாயே.

### வசனம்

அடா வாடா பயலே! எனக்கு அருமையானவர் தவிர மற்ற எவர்களும் இந்த வனத்தில் வரக்கூடாது. நீ இவ்விடம் வந்தபடியால் உன்னைக் கொன்றுபோடுவேன். உன்னுடைய சவிஸ்தாரத்தை சொல்வாயடா பயலே.

### வீமன் தரு

சரணம்சரணமம்மா ஜெகத்ரக்ஷகி
தாயேசரணமம்மா

தருணமதிலேயெந்தன் தங்கைபாண்டுராஜன்
நிர்ணயமாய்குந்தி வயிற்றிற்பிறந்தவன் சர

அண்ணன் தருமராஜன் அவர்க்கிளையோன்வீமன்
அர்ச்சுனன்நகுலன் சகாதேவன் தம்பிமார்கள் சர

பங்காளி துரியனுல் பாரவனத்தில்வந்து
பன்னகசாலையில் பதனமாயிருக்கையில் சர

ஐவர்க்கும்தேவி அரிவைதுரௌபதைக்கு
அன்பாய்மந்தாரைபுஷ்பம் அளிக்கும்படியாய்க்கேட்க சர

அளகாபுரியைநோக்கி அடியேன்வரும்வழியில்
அம்மணிஉனைக்கண்டு அடியில்பணிந்தின்றேன் சர

### வீமன் கவி

அம்மணிகௌரிவீரி ஆதிமுக்கண்ணிசக்தி
இம்மையில்யானும்வந்த சேதிகளெடுத்துச்சொன்னேன்
நன்மையாயெந்தனுக்கு நலமுடன்வரமளித்து
செம்மையாய்மனமகிழ்ந்து சீக்கிரமனுப்புவாயே.

### வசனம்

சரணம் சரணமம்மா! இந்த உலகத்தை காத்துவாநின்ற லோகரக்ஷகி! என்னுடைய சவிஸ்தாரமும் நான்வந்த சேதியையும் விபரமாகச் சொன்னேன். என்பேரில் தயவுபுரிந்து நான் போகிற காரியம் ஜெயமாகும்படியாக வரமளித்து விடைதந்து அனுப்ப வேண்டுமம்மா தாயே.

### காளிசொல் விருத்தம்

அப்பனேவாழிவாழி அறம்பெருந்தருமர்தம்பி
இப்புவியுள்ளமட்டும் நீடூழிகாலம்வாழி
அப்பனேகோட்டைதன்னில் அதிபதியாயுள்ளோனை
தப்பிதம்வரவொட்டாமல் தடுத்தமர்செய்திடாயே.

வசனம்

கேளுமப்பா வீமசேனா! பூலோக தயாநிதியாகிய தர்மராஜ னுடைய தமபியென்று சொன்னபடியினாலே நான் அதிக சந்தோ ஷத்தையடைந்தேன். ஆகையால் நீ அளகாபுரிக்குச் சென்று மந்தாரைபுஷ்பங் கொண்டுவர வேணடுமென்று சொல்லுகிறுப். அந்த அளகாபுரி கோட்டைவாசல் காவலாளியாகிய மணிமாலன அநேக வரங்களைப் பெற்றவன, அவனை ஜபிக்க தேவர்களாலும் முடியாது. ஏனெனில் இடும்பாசூரன பக்காசூரன் கீசகன ஜராசந் தன் மணிமாலன் துரியோதனன உன்னோடு ஆக ஏழுபேரும சரி பலம் பெற்றவர்கள். இந்த ஏழுபேரில் ஒருவனை முந்தி எவன கொல் கிறானோ அவன் கையால் மற்றவர்களும மடியவேண்டும். நீ இடும பனையும பக்காசூரனையும் கொன்றுவிட்டாயல்லவா, அந்த மணி மாலனையும் நீயே கொல்வாய. உனக்கு வேண்டிய வரங்களைத் தந்தேன், சுகமாகப் போய்வாருமப்பா வீமசேனா.

வீமன் தரு கொண்டிச்சிந்து

விடைபெற்று நடந்தானே விமலிகையில்
வீரமணிமாலனையும் தீரமாய்க்கொல்ல

கடலொலிபோலவே சீறி
காணுமிருகமெல்லாம் கலங்கிடவே

திடம்பெற்ற மணிமாலனை இப்பொழுது
தெண்டினாலடித்தவன் மண்டையுடைப்பேன்

அளகைக்குள்ளே நுழைந்து மலர்களை
அடுக்காகவாணுமெடுப்பேன் தத்தோம்

பொது வசனம்

அகோதெப்படியென்றால், வீமசேனன் அளகாபுரிக்கோட் டைக்கருகில் வந்துசேர்ந்து தான்வந்தசேதி அறியும்படியாக யானை போல் கெர்ச்சித்து இருக்கும்போது இந்தச்சத்தம் மணிமாலன் கேட்டு மகாகோபத்துடன் வருவது.

மணிமாலன் சொல் விருத்தம்

சித்திரரதத்திலேறிச் சிங்கத்தைப்போல்கெர்ச்சித்து
பத்தரைமாற்றுத்தங்கப் பசும்பொன்னூற்பணிகள்பூட்டி
அத்துமேகடந்துவந்த அதிபலவீமன்தன்னை
மத்தகப்பிளப்பேனென்று மணிமாலன்வருகின்றானே.



## தரு

வந்தான் மணிமாலன் பாரீர் இதோ
வந்தான் மணிமாலன் பாரீர்

| | | | |
|---|---|---|---|
| | வந்தான்மணிமாலன் | வாகுவலயம்பூண்டு | |
| | சந்தோஷமாகவே | சமராடிசெய்வேனென்று | |
| சுருள் | சந்திரசூரியர் | சிந்தைகலங்கிட | |
| | வந்தவரெதிரெதிர் | கண்டுநடுங்கிட | வந் |
| | வேலும்சூலமும்கத்தி | வேணசருகிசத்தி | |
| | காலில்தண்டைகளகொஞ்ச | கமலநயனமிஞ்ச | |
| சுருள் | கண்டவரெவர்களும் | நின்றுபணிந்திட | |
| | கண்டனென்றுமே | கொண்டுகதையுடன் | வந் |
| | அளகாபுரிக்குபேரன் | அவன்கோட்டைக்கதிபனாய் | |
| | தளகர்த்தனெனவே | சமர்த்திலதிகமுள்ளோன் | |
| சுருள் | சங்கதியென்னமோ | அங்கேநான்சென்று | |
| | தங்கிடும்அரசனைத் | தாக்கிடஅறைவேன் | வந் |
| | வீரவாளாயுதமும் | வில்லுங்கையிலிலங்கிட | |
| | தோர்ப்பாணங்கொண்டு | சுருக்காய்வேட்டையைநாடி | |
| சுருள் | தோமரப்தேர்மரம் | ஆர்மாஆயுதம் | |
| | கார்முகசூலம் | கெதாயுதங்கொண்டு | வந் |

பொது வசனம்

அகோதெப்படியென்றால், மணிமாலன் போர்க்கோலங்கொண்டு வீமன்பேரில் சமாரகிய யுத்தத்திற்கு போகும்போது அதை அறியும் படி அவர் தேவியாகிய மதனவல்லி சபைக்கு வருவது.



மதனவல்லி சொல் விருத்தம்

சித்திடையில் ஒட்டியாணம் பளபளென்ன
சேலையுடன் பணிதிகளும் மிகத்துலங்க
இரத்தின வாபரணமது சோதிமின்ன
ரவிக்கைமுத்துத் தாவடங்கள் திகதிகென்ன
கத்தியொடு சூலமுடன் எடுத்துமன்னன்
காணவவன் தனைக்கூறு யனுபவிக்க
வித்தகியாம் விநோதமுள்ள வல்லியாளும்
விளங்கிடவே சபைநாடி வருகின்றாளே.

மதனவல்லி வருகிற தரு

வந்தாள் மதனவல்லியும் மிகஒயிலாய்
வாராள் மதனவல்லியும்

வந்தாள்மதனவல்லியும் வானுலகமாதுபோலே
கந்தம்பரிமளங்கள் கமகமவென்றுவீச
சுருள் கங்கணவளையதும் கலகலவென்றிட
காரிழையிவளுடன் சேயிழைசூழ்ந்திட வந்

முத்துமாலைகள் துன்னவே மின்னொளிபோல
மோகனபதக்கமின்னவே
வெற்றிப்பிரதாபம்பெற்ற வீராதிவீரதீரன்
வீரத்தண்டைகொலுசு காலில்கலகலென்ன

சுருள் வித்தகர்மெச்சிடும் உத்தமபூஷணி
சுத்தமாய்காதலனை முத்தமிட்டணைய வர்

காலிற்சிலம்புகொஞ்சவே இவளழகை
கண்டோர்மதிகெஞ்சவே
மேலினிற்பூஷணமின்ன விண்ணோர்கண்டுமகிழ
சோலைக்கிளிபெனவே சொல்லுமொழி துலங்க

சுருள் சுத்தபரிமள உத்தமியிவளென்ன
நத்தியேமாதர்கள் சுத்தியேவருக வர்

சேலைபளபளென்னவே ராஜமுடிகட்டி
சிரசில்மிகமிகென்னவே
வேலைப்பழித்தவிழி வாலைப்பருவமொழி
சேடியர்கள் அருகினில் கூடியேவந்திட

சுருள் சித்தமகிழுநாதன் உத்தமகோலங்கொண்டு
வெற்றிசெய்யப்போகும் வேடிக்கைபறிந்திட வர்

## மதனவல்லி விருத்தம்

ஜெகமதில்துஷ்டர்வச மெனதுாரதா
அகமதில்துணிவுகொண்டிங் காருடன்போர்க்கெழுந்தீர்
வெகுவிதசபைமுன்பாக விளங்கவேவுரைத்துநீரும
அதிவிதவிரகந்தீர யணைந்துமேபோவீர்மனஞ.

## வசனம்

சரணம் சரணம் எனது பிராணநாயகா! இப்போது அதிக கோபத்துடனே யுத்தகோலங்கொண்டு யார்பேரில் சண்டைககுப் போகிறீர். ஆகிலும் மன்மதபாணமாகப்பட்டது என் மார்பில் ஊடுறத்தாக்கி எனக்கு விரகவாதை அதிகமாகிறது. ஆகையால என் விரகதாபத்தைத் தீர்தது பிறகு போகலாமையா சுவாமி.

## மணிமாலன் சொல் விருத்தம்

மங்கையேசொல்லக்கேளாய் மன்னவன்கோட்டைதன்னில்
சிங்கம்போலெவனோவந்த சேதியுங்கேள்வியானேன்
சங்கையில்லாமல்நானும் ஐடுதிப்லவனைக்கொனறு
பொங்கமாய்வந்துனை பூரிததுசேருவேனே.

## வசனம்

கேளும் பெண்ணே பிராணநாயகி! அதோ அளகாபுரிக்கோட்டையில் யாரோ ஒருவன் கெர்ச்சித்துவருகிறுன், நான் சென்று அவனைச் செயித்து மறுபடி வந்து உன்னுடைய விரகதாபத்தை தீர்க்கிறேன், நீ அரண்மனைக்குப் போய்ச்சேரும் பெண்ணே பிராணநாயகி.

### மதனவல்லி தரு தர்க்கம்

எந்தனுடபிராணநாதா இவ்வேளை
ஏற்குமோ உமக்கிதுசூதோ
சந்தோஷமாகவே தையலெந்தனைக்கூடி
சிந்தையாய்வந்துமென் விரகதாபத்தைத்தீரு எந்

### மணிமாலன் தரு

தையலேயிதுயென்னபேச்சு இந்த
தாணிபுகழும்ராஜனைச்சு
மையலாய்வந்திப்போ மதிப்பில்லாமற்பேசுறாய்
ஐயனுக்கினைக்கு அழிவுவருங்காலமோ தை

### மதனவல்லி தரு

மாரன்கணைகளிதோமீறி எந்தன்
மார்பில்விடுகிறானேதூறி
சேருமென்னோடுநீயும் சித்தமயங்கவேண்டாம்
வாரும்வாருமன்னனே வந்தொருமுத்தம்தாரும் மா

### மணிமாலன் தரு

என்னடிவாதுநீபேசுறாய் மனம்
ஏக்கங்கொண்டுவீணாய்வீசுறாய்
வன்னவில்லுங்கெதையும் வாளுங்கையிலெடுத்து
சொன்னமயிலேபெண்ணே சொகுசுடன்போய்வாறேன் என்

### மதனவல்லி தரு

போய்வாரேனென்றுநீர்பேசுகிறீர் என்னை
புத்திமயக்கங்கொண்டுயேசுறீர்
ஈசன்மருமகனாரும் எடுத்துமலர்க்கணையை
நேசனேயிதோவிட்டு நின்றானென்னுடன்சேரும் போ

### மணிமாலன் தரு

மன்மதன்பாணத்தாலேங்குறாய் பெண்ணே
மயக்கங்கொண்டுவீணாய்த்தேங்குறாய்
நான்சொல்லும்மொழிகளை நாயகியேநீகேளும்
என்கண்ணேஎனைச்சேர இருதயத்தில்நினைக்குறாய் மன

### மதனவல்லி தரு

நினைக்கவேண்டாமென்றுசொல்லுகிறீர் மன்னா
நிமிஷத்தில்மாரன்கணைவெல்லுவீர்

சற்றேபெர்தனைச்சேர்ந்து முத்தர்தருகாவிட்டால்
மெத்தபாவமுண்டாகும் மெய்யிதுசொன்னேனிப்போ நினை

மணிமாலன் கவி

பாவமுமேதுபெண்ணே பயித்தியங்கொண்டாப்போலே
கேவலமாகவிப்போ கெடுதியாய்ப்பேசவந்தாய்
நாவினாற்சொன்னவார்த்தை நானுமேசெய்தேனானல்
பாவமும் அதுவேயாகும் பதியேகிடந்திடாயே.

வசனம்

கேளும் பெண்ணே மதனவல்லி! உன்னைச் சேராவிட்டால் பாவமென்று சொல்லுகிறாய். அப்படி உன்னைச்சேர்ந்து யுத்தகளத்திற்குச்சென்றால் எனக்கு வெற்றிபெறமாட்டாது. உன்னை நான் சேருவதில்லை, அரண்மனைக்குப் போய்ச்சேரும் பெண்ணே.

மதனவல்லி தரு

சேருவதில்லையென்று திறமாகப்பேசுகிறீர்
சித்தங்கலங்குதே என்பிராணநாதா

மணிமாலன் தரு

சித்தமேன்கலங்குறாய் சத்துருநேரத்திற்சென்று
ஜெயம்பெற்றுவருகிறேன் பெண்மணியே

மதனவல்லி தரு

வருவதேதுநீயென் மணவாளாபஞ்சணையில்
இருவருங்கூடுவோம் பிராணநாதா

மணிமாலன் தரு

கூடுவோமென்றுசொல்லி குணபேதமாகினாய்
கூடினால்பிழைவரும் பெண்மயிலே

மதனவல்லி ஓடி கந்தார்த்தம்

பிழையொன்றுமில்லைமன்னா
பேதையாள்நானுமிங்கே
அலைவதுஉமக்குத்தானும்

தரு

அடுக்குமோசொல்லும் இப்போதும்மை
தடுத்தேன்நான்கில்லும்
விடுத்துச்சமர்செய்தாலே விண்ணைப்மடிந்திடுவீர்
திடத்துடனெனைச்சேர்ந்து செல்வனுண்டாகச்செய்வீர்

சருள் தீராயிப்போ கூறுய்மொழி
மாரன்கணை தீராய் அடு



### மணிமாலன் ஓடி கந்தார்த்தம்

சண்டாளி பானபெண்ணே
சபாஷ்நீ சொன்னவார்த்தை
தெண்டினு லடிப்பேனிப்போ

தரு

திரும்பிநீபோடி நானே உன்னை
மருகுவேன்வாடி

அரன் அரிபிர்மாவும் அமரர்கள்வந்தாலும்
திறமுடனேவெல்லத் தீரமெனக்குண்டு

சருள் திருட்டுக்கள்ளிநீ எட்டநில்லடி
முரட்டுத்தனமாகப் பேசவந்தாய் திரு

### மதனவல்லி கந்தார்த்தம்

மன்னனே சொல்லக்கேளாய்
மனைவியாள் சொல்லும்வார்த்தை
சென்னியும் நடுக்கமுற்று

தரு

சிதறுதேமனது மாரன்கணையால்
பதறுதேமனது
பதறும்மொழியினாலே பலனென்றுகூறுவீர்
பாலகனுண்டானால் காலத்திற்குதவியாம்
சருள் பாசமாயிப்போ நேசமாயென்னை
ஆசைதீரவே அணையவாருமே சித்

மணிமாலன் கந்தார்த்தம்

என்னதான் சொன்னபோதும்
எதிர்த்துமே பேசவந்தாய்
சென்னியி லடித்துதைப்பேன்

தரு

சீக்கிரம்போடி அரண்மனைக்கு
சீக்கிரம்போடி
வாக்குவாதமாக வந்திங்கேபேசாதே
நோக்கிவாளையெடுத்து நொடிக்குள் தலையறுப்பேன்
சருள் நொந்துநீயுமே வந்துபேசுறாய்
மந்திரவாளினால் உன்னைக்கண்டிப்பேன் சீக்

மணிமாலன் கந்தார்த்தம்

அதிபதியானதீரன் அடிக்கவேமதனவல்லி
பதிதனிற்சேர்ந்தபோது பராக்கிரமமணிமாலன் தான்
அதிகர்முதலாயுள்ள அநேகமாய்சேனைகூட்டி
எதிரியாய்வந்தோன் முன்னே,

தரு

ஏகினான்பாரீர் மணிமாலன்
ஏகினார்பாரீர்
வாகுவலயங்கத்தி வடிவாள்தண்டமும்சூலம்
ஏகப்படையுடனே வேகமதாகவே
சருள் என்னைவெல்லுவார் ஒருவரில்லையே
மன்னன் அவனைநான் கொல்லயேகுவேன் ஏகி

மதனவல்லி விருத்தம்

என்னநான்செய்வேனையா இதுதலைவிதியாதேவே
முன்னுளகுறையேயாதோ மோகமாய்விரகதாபம்
தன்னையேயொழித்திடாமல் தைரியமுடனேசென்றார்
அன்னைதந்தையர்கள்செய்த அரும்பிழையிதுவேகாணேன்.

வசனம்

ஐயையோ தெய்வமே! என்னுடைய விரகதாபத்தையும் தீர்க்க மாட்டேனென்று சமராகியயுத்தத்திற்கு நடந்துவிட்டாரே, திரும்பி வருவாரோ? அல்லது அவ்விடத்திலேயே இறந்துபோய்விடுவாரோ? இதற்கு நான் என்னசெய்வேன் தெய்வமே.

மதனவல்லி தரு

அய்யோநானென்னசெய்வேன் ஆகம்கடுங்குதிப்போ
அயனிடசோதனையோ தெய்வமே

விரகதாபத்தைக்கொண்டு வேண்டிநான்சேரச்சொன்னேன்
வெடிப்பாகப்பேசினாரே தெய்வமே

சண்டைக்குப்போறேனென்று சாடையாய்ச்சொல்லிவிட்டு
சல்திநடந்திட்டாரே தெய்வமே

சேருமென்றுநான்சொன்னேன் சித்தத்தில்நினையாமல்
சென்றார்சமர்பொருத தெய்வமே

வலதுகண் துடிக்குதே வருவாரோதிரும்பியும்
வார்த்தையொன்றையுங்காணேன் தெய்வமே

மணிமாலன் கவி

ஆரடாவந்ததிங்கே ஆங்காரக்கொர்வங்கொண்டு
போரடாசெய்யவந்தாய் புலிக்குமுன்பூனைபோலே
பாரடாவுன்தேகத்தைப் பதைபதைத்திடவேசெய்வேன்
கூரடாவூரும்பேரும் சொல்லுவேன்நொடியிற்றானே.

வசனம்

அடாவாடா துஷ்டப்பயலே! அச்சமில்லாமல் என்னுடைய காவலென்றும் பாராமல் இவ்விடம் வந்தாயல்லவா? இதோ வில்லை எடுத்தேன் எதிர்த்துவாடா பயலே.

வீமன் தரு

என்னடாபேயா என்னிடம்வந்து
உன்னிடவாயால்

மன்னவனென்று மனதில்பயமில்லாமல்
என்னுடனேபேச ஏதவுனக்குவீரம் என்




மணிமாலன் தரு

ஆரடாமுரடா இங்கேன்வந்தாய்
கூரடாதிருடா

நேராகவந்துமே நின்றிங்கேபேசுறாய்
நிமிஷத்திலுன்சிரத்தை நீண்டவாளாலறுப்பேன் ஆ

வீமன் தரு

வெற்றிகளேது அந்த
விதமதையோது

சுற்றியேயெந்தனைச் சூழ்ந்துவந்தீர்களே
இக்ஷணத்தில்யானும் எமபுரஞ்சேர்க்கின்றேன் வெ

மணிமாலன் தரு

ஓடடாவென்று கூடவந்தோரை
சாடுவேனென்று

ஓடாகூடமாக இங்கேபேசாதேபோடா
என்கைபாணத்தினாலே எமலோகஞ்சேர்க்கிறேன் ஓட

மணிமாலன் கவி

கொல்லுவே னென்றுசொன்ன
கொடுமை யுள்ளவனேகேளாய்
எல்லைபி லுன்னைக்கொன்றே
எமனுல கேற்றவேனே.

வீமன் கவி

கல்வியாய்ப் பேசவந்த
காவலா காலனூருக்
கெல்லாம் விருந்தளிக்க
எதிர்த்திதோ வந்தேன்பாராய்.

வீமன் வசனம்

அடா வாடா இராட்சதப்பயலே! இந்த அளகாபுரியிலிராகின்ற மந்தாரை புஷ்பத்தைப் பறித்துக்கொண்டு போகும்படி வந்தேன். நீவந்து என்னுடன் எதிர்த்துவந்தபடியால் உன்னைக் கொல்லாமல் விடமாட்டேன் எதிர்த்துவாடா பயலே.

மணிமாலன் வசனம்

அடா வாடா பயலே! நான் இந்த அளகாபுரிக்கோட்டை வாசலுக்கு அதிகாரியாக இருந்தும் என்னைச் செயிக்க உன்னால் திறமை யேது? உன்னை எமலோகம் சேர்ப்பேன், வந்தவழி பார்த்துத் திரும்பி ஓடிப்போடா பயலே.

வீமன் தரு

ஓடிப்போடாவென்றுசொல்லி வீரியமாய்ப்பேசுகிறாய்
தேடியேகெதையை எடுத்தேன்பாரடா ஓடி

மணிமாலன் தரு

பாரடாநீயென்றுசொல்லி பதட்டமாய்ப்பேசுகிறாய்
பாரில்விழவேதெண்டால் நானும்அடிப்பேன் பா

வீமன் தரு

சந்திரகுலத்தில்வந்த தர்மராஜன்தம்பியென்று
சத்துருமெண்ணாமல் வந்தால்விடுவேனோ சந்

மணிமாலன் தரு

இராஜனானுமென்ன மோசமாய்க்கோட்டைக்கு
உள்ளோடியேமலர் எடுக்கவிடுவேனோ ரா

வீமன் தரு

விடுவதென்னடாவுயிர் உடனேபோக்குவேன்பாரும்
விட்டேனடுக்காய் பாணம்கெட்டுமுறிய விடு

## மணிமாலன் வசனம்

அடே வாடா வீமசேனு! நாம் இருவரும் வில் வாள் கெதை இதுகளினுற் சண்டைசெய்வதை நிறுத்தி மல்யுத்தஞ்செய்து ஒருவரையொருவர் வெற்றியடையலாம் வாடா வீமசேனு.



## வீமன் தரு

மல்லுசண்டைசெய்யவெதிர்த்தார் இருவர்களும்
கொல்லுகிறேன்பாரென்றுகுதித்தார்

அல்லல்படவேசூரன் ஆக்கரித்துமேவிழுந்து
கொல்லுகிறேனென்றுசொல்லி கோடைபிடிபோலதட்டி மல்

## மணிமாலன் தரு

காலருத்திரன்போலவே மணிமாலன்
காலருத்திரன்போலவே

காலருத்திரன்போலவே கையுடனேகைபிசைந்து
ஆலகாலமாகவே ஜாலமில்லாமனிதோ கா

## வீமன் தரு

ஆக்ரமித்துக்கோபமீறினுன் மதவீமன்
ஆக்ரமித்துக்கோபமீறினுன்

ஆக்ரமித்துக்கோபமீறி பார்ப்பவர்பயந்தோட
நோக்கும்மணிமாலனை தூக்கிப்பூமியிலறைந்தான் ஆ

பொது வசனம்

இவ்விதமாக மணிமாலன் வீமசேனனால் இரணகளத்தில் மடிந்தசேதி மதனவல்லி அறிந்து தயரப்படுகிறவிதம் காண்க.

மதனவல்லி சொல் கொச்சகம்

என்னசெய்வேனே துசெய்வேன் ஈசன்செயலிதுவோ
முன்னமேநான் தடுக்க மூர்க்கமுடன்சமர்க்கெழுந்து
அன்னவாகனமேறும் அமலன்செயலிதுவோ
சொன்னவிதிப்பயனே சோருதேயென்தேகமெல்லாம்.

வசனம்

ஐயையோ தெய்வமே! முன்னமே சமருக்குப் போகிறபோது என் விரகதாபத்தைத் தீர்த்துப்போகும்படி சொன்னேன். என் பேரில் கோபித்துச்சென்ற என்பிராணநாதர் மடிந்துவிட்டாரே, என்னசெய்வேன் தெய்வமே.

மதனவல்லி தரு

ஐயோவிதுவிதியோ எமலோகம்
அடைந்தாரே பிராணநாதர்

மெய்யன்பிராணநாதர் மேவிச்சமர்க்கெழுந்தார்
வையகம்நடுங்கவே மடிந்துமேல்விழுந்தார்
சுருள் மெய்யும்நடுங்குதே ஐயோவென்செய்வேன்
உய்யவந்துதே ஒண்டியானனே ஐ

காமன் கணையினாலே களைத்துகலங்கிநின்றேன்
ஏமன்எதிர்வருவ றென்றுமேயெனைச்சேர்ந்தால்
சுருள் எங்கேசென்றுமே தங்கினீரையோ
அங்கம்பதறியே ஆவிநடுங்குதே ஐ

கண்ணாளனேயென்தன் கருத்துக்கிசைந்தநாதா
மண்ணில்இப்படி மாள மகாதேவன்விதித்தாரோ
சுருள் மன்னவர்மன்னவர் உன்னைஜெயிக்கவும்
என்னவரமது வாங்கிவந்தீரோ ஐ

உன்னைப்பறிகொடுத்து ஒண்டியாயிருப்பேனோ
உடன்கட்டையேறவே உடனேதீமூட்டுவேன்
சுருள் உலகந்தன்னையே காத்தயீசனே
உன்னைவணங்கியே தீயில்விழுந்தேனே ஐ

பொது வசனம்

அகோதெப்படியென்றால், மதனவல்லியானவள் தீயில் விழுந்து இறந்தபின் அளகாபுரி பட்டணத்தை அரசுசெய்துவாராநின்ற குபேரமகாராஜன் கொலுவுக்கு வருகிறவிதங் காண்க.



குபேரன் வருகிற விருத்தம்

சேனையுடன் தாதிகளும் நெருங்கிச்சூழ
சேல்விழியாம் மாதர்களும் ஆலமேந்த
ஆனைபரி காலாள்கள் படைநெருங்க
அரசர்களும் வணங்கிகப் பணஞ்செலுத்த
சோதிமுடி ஆபரண மிகத்துலங்க
சொகுசுடனே வில்லம்பு கெதைவாளேந்தி
ஆதுலர்க்கு தானமது கொடுக்குந்தீரன்
அன்புடனே குபேரனிதோ வருகின்றானே.

தரு

வடதிசைக்கதிபனாய் வரம்பெற்று அரசாள
வந்தான்குபேரராஜன் நவமணிமுடி துலங்கிட
வாரான்குபேரராஜன்
திடம்பெற்றசேனைகள் திமிதிமியெனச்சூழ

சுருள் திம்தரிநாதரி என்றுமேநாட்டியம்
சிந்தைமகிழ்ந்துமே விந்தையாய் ஆட வட

மந்திரிமார்களும் மகிழ்ந்திருபுரம்சூழ
மண்டலத்துள்ளோர்கள் மகிழ்ந்தெனைக்கொண்டாட

சுருள் மாதர்களிருபுரம் சாமரைபோட
நாதகீதமும் காவலர்பாட வட

ஏகப்பொருளாய்நின்ற எம்பெருமானைப்போற்றி
ஆகமவேதங்கள் அந்தணரைத்தொழுது

சுருள் ஆரமும்பணிகளும் கீதமும்பாடிட
அண்டத்திலுள்ளவர் பூமலர்சொரிந்திட வட

விச்சித்திரவாகுபுத்திரர் விஸ்வநாதர்சிநேகர்
வேதகீதனமரி வேணுமெக்காளமூத

சுருள் வேலுடன்சூலமும் தண்டமுங்கொண்டு
காலனுமென்னவே கண்டவர் அஞ்ச வட

### குபேரன் கவி

அண்டர்களுலகமெல்லாம் ஆகியாய்நிறைந்தாய்போற்றி
வண்டணிதுளபமாலை மார்பினிற்றரித்தாய்போற்றி
கண்டுமேபணிந்தோருக்குக் கனவரமளிப்பாய்போற்றி
மண்டலந்தன்னைக்காத்த மகாதேவாபோற்றிபோற்றி.

### வசனம்

அண்டபிண்ட சராசரம் ஆயிரத்தெட்டண்டம் 224-புவனம் சத்தசாகரம் ஜம்புத்தீவென்று சொல்லாநின்ற இந்தக் கடல்சூழ்ந்த பூவுலகத்தையும் காத்து இரக்ஷித்துவாராநின்ற ஜெகதீசனுடைய பாதாரவிந்த கமலங்களுக்கு வந்தனம் வந்தனம். வடக்குத்திசையென்று சொல்லாநின்ற அளகாபுரிபட்டணத்தில் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரனென்னும் சொல்லாநின்ற நான்கு வருணத்தவரும் க்ஷேமம்பொருந்தி வாழ்ந்துவருகிறார்களா? சொல்லுங்கள் மந்திரி மார்களே.

### மந்திரி வசனம்

சரணம் சரணம் எங்கள் அரசனே! நமது பட்டணத்திலுள்ள சகலமானபேரும் க்ஷேமம்பொருந்தி வாழ்ந்துவருகிறார்கள். ஆகிலும் யாரோ ஒரு அரசன்வந்து நமது கோட்டைவாசல் காவலாளியாகிய மணிமாலனைக் கொன்றுவிட்டானையா சுவாமி.

குபேரன் விருத்தம்

இந்தவிதம் தூதனுமே சொல்லக்கேட்டு
இருவிழியும் பொறிபறக்கக் கோபமீறி
அந்தரத்து வானவர்கள் எதிர்க்கொணுத
அளகேசன் தன்கோட்டைக் கதிபனுன
தந்திரமுள்ள மணிமாலன் தன்னையிப்போ
தரைதனிலே விழுந்திடவே மடித்தோன்றன்னை
சிந்துசிந்தாய்க் கொன்றிடவே நமதுசேனை
தலைவனையும் சீக்கிரமாய்க் கொண்டுவாரீர்.

குபேரன் வசனம்

ஆ ஆ வாருங்கள் மந்திரிமார்களே! தேவராலும் மூவராலும் ஜெயிக்கவொண்ணுத நமது கோட்டைக்கு அதிபதியாகிய மணிமாலனைக் கொன்ற மானிடனைக் கொல்லவேண்டாமா? நமது சேனைத்தலைவனுகிய சித்திரலோலனை சீக்கிரம் அழைத்துவாருங்கள் மந்திரிமார்களே.

சித்திரலோலன் விருத்தம்

வல்லவனும் குபேரனுமே அழைத்தசேதி
வகைவிபரம் கேட்டிடவே மனதிலெண்ணி
சொன்னவுடன் கோபமீறி எழுந்திருந்து
சுருக்குடனே வில்லம்பு கதைவாளேந்தி
நல்லதந்த நரமனுஷன் பல்லையிப்போ
நானுமிதோ போர்க்கோலங் கொண்டுசீறி
மல்லுத்தஞ் செய்தவனைக் கொல்வேனென்று
மணிசித்ர லோலனுமே வருகின்றனே.

சித்திரலோலன் தரு

மாயவீரர்கள் புடைகள்சூழ்ந்திடவே சூரதிசூரன்
மணிசித்திர லோலன்வந்திடவே
காதலாய்க்குரு நாதரும்பல
தேவரும் விநோதமாய்வர மாய

நமரிகாம சுரங்களுதிடவே சல்லரிபம்பை
நாகரஞ்சித டவுல்மோதிடவே
குமுராமுரசுகள் அதிரவெடியொடு
அமிர்தவசனியர் திமிர்த்தமின்னவே மாய

ஆனையும்பரி தேர்கள்நெருங்கிடவே பதாதியோடு
அணிவகுத்திடு மரசர்பயந்திடவே
வாணரும்பல கவிகள்பாடிட
நானிலம்புகழ் வானவரும்பலர் மாய

திருமாலயன் தேவர்தியங்கிடவே அளகைதன்னில்
கொல்லப்போக வென்றுமயங்கிடவே
தருகுமாலையும் மலர்களாடிட
எவரும்வந்துமே தலைகுனிந்திட மாய

சித்திரலோலன் குறுவிருத்தம்

வடதிசையளகைதன்னை வனுவுடனாளுமெங்கள்
திடமுளகுபேரபூபா திருவடிசரணம்போற்றி.

வசனம்

சரணம் சரணம் எங்கள் அரசே! என்னை அழைப்பித்தசங்கதி தெரியச் சொல்லவேணும் சுவாமி.

குபேரன் குறுவிருத்தம்

கடலொளியெனவேவந்த கருத்துள்ளசித்திரலோலா
திடமுறப்பயலைவென்று சீக்கிரம்வருகுவாயே.

வசனம்

கேளுமப்பா சேனைத்தலைவனாகிய மணிசித்திரலோலனே! நமது கோட்டை வாசலுக்கு அதிபதியாகிய மணிமாலனைக் கொன்ற மானிடனை எமலோகம்சேர்த்து வாருமப்பா சித்திரலோலனே.

சித்திரலோலன் தரு

சண்டைக்குநடந்தானே மணிசித்ரலோலன்-திடமுள்ளசீலன்
சண்டைக்குநடந்தானே

சண்டைக்குநடந்தானே அண்டங்கிடுகிடென்ன
சுருள் தளமுடனேவெகு சேனைகள்சூழ
அளவிலாதரண களமதைநாடி சண்

காலபாசமுங்கத்தி கெதைவாள்தண்டம் சூலதண்டம்
பாலாசாரிகை பாங்குபட்டயம்
சுருள் தோமரமசட்டியும நேரிசைதந்தமும்
நாமதசங்கமும சக்காம்பிடிதது சண்

அடிக்கமுரசுடங்கா அதிரும்சல்லரி எக்காளம்பூரி
வெடிககஅணடரெணடமும விருதுவாத்தியம்பாட
சுருள் வீரியமணிமுடி பாரியபுஜமணி
சூரியனெனவே தேரினிலேறியே சண்

எத்தபத்தினாலே எதிர்த்தான்வீமனுடன் மதித்தானவன்திடனே
வநதானிவவிடமநாடி மடித்தான மணிமாலனை
சுருள் மட்டுப்படாச்சின மீறியேகூறியே
கட்டுப்படாப்பல சாவியும்தேறியே சண்

### சித்திரலோலன் வசனம்

அடா வாடா பயலே! எங்கள் கோட்டை வாசலுக்கு அதிபதியாகிய மணிமாலனைக் கொன்றுயல்லவா? இப்போது நான் சமாராகிய யுத்தத்திற்கு வந்தேன் எதிர்த்துவாடா மானிடனே.



### சித்திரலோலன் தரு

சண்டைசெய்யவேயெதிர்த்தான் சித்திரலோலன்
சரமாரிபோல்விடுத்தான்

கண்விழியுருண்டிட பெருவெள்ளம்புரண்டிட
காரணமணிமாலனால் மீறியேசித்திரலோலன்

கண்டகண்ட தூரமட்டும்
வின்றுசர மாரிபெய்ய

கடல்கள்திரண்டாப்போல ஒருமித்தவீமசேனன்
கால்மாடுதலைமாடாய் ஓடியேதிகைத்திட சண்

### வீமசேனன் தரு

அரக்கரைவனைத்திடமே நெரித்தான்வீமசேனன்
மணிசித்திர லோலனை அடித்தான்

முருக்குமஸ்திரங்கொண்டு அரக்குநேனபடைகளை
ஆகியசேனைகளோடி மேகத்தில்மறைந்தார்கோடி

அந்தரந்தனிலேவிழ தொந்தோமென்றுகூளிபாட
அலைபகுலைபதேவரெல்லாம் நிலைகலங்கிஓடிவாட அ

சித்திரலோலன் தரு

நல்லதுபயலே இன்றுமேயிருகூறாய்
சொல்லுவேன் வாளினலென்றுமே

வல்லவனேவீமசேனன் மல்லுசண்டைசெய்தவனே
கொல்வேன்மனதுகொண்டு வெல்லுவேனுனேயின்று

கூடியேபடையெடுத்து நாடியேயுங்களைக்கொல்வேன்
வாடிடஎமபுரிக்கு தேடியேஓடிடச்செய்வேன் நல்

வீமன் தரு

மண்டைகள்பிளந்திட வெடுத்தேன்வில்லை
வளைத்தேன் கரந்தொடுத்தேன்

கொண்டேன் அனேகபாணம் கோடானகோடிசரம்
உண்டோவுனக்குவீரம் ஒழியப்போறாய்காலம்

உருட்டுவேனுன்தலையை சிரட்டைதேங்காயைப்போலே
திரட்டுவேன்படைகளை விரட்டிமடியச்செய்வேன் மண்

குபேரன் தரு

இந்திரலோகத்துள்ளே எவர்களும்ஜெயிக்கொணுத
சுந்திரவடிவமான சூரனைக்கொன்றேன்தன்னை
அந்தரமாய்ப்புவனமெச்ச அவனையும்ஜெயிக்கவேண்டும்
விந்தையாய்படைகள்தன்னை விரைவினிற்கூட்டிவாராய்.

குபேரன் வசனம்

ஆ ஆ வாருங்கள் மந்திரிகளே! நமது சேனைத்தலைவனுகிய மணிசித்திரலோலனைக் கொன்ற மானிடனை நாம் சென்று கொல்ல வேண்டியதால் நமது சேனைகளெல்லாம் யுத்தத்துக்கு புறப்படும் படிசெய்யுங்கோள், நமது சிங்காரரதத்தையும் ஜோடித்துக்கொண்டு வாருங்களப்பா மந்திரிமார்களே.

குபேரன் தரு

அப்படிப்பட்டவனுரடா அவனை
அதஞ்செய்துவருகிறன்பாரடா

எப்படி அவன்வந்தான் எந்தன்நகரந்தனில்
எதிர்த்தபேரையெல்லாம் சதைத்துஎறிந்திடுவேன் அப்

கண்டவுடனேசூழவாருங்கோள் அவனை
கசக்கியெறிந்திடுவேன்பாருங்கோள்

மண்டைசிதறும்படி வாட்டுவேன்கொடிதனில்
மண்ணும்விண்ணுமதிர மானிடன்தனைவெல்வேன் அப்

அதிரதர்மரகதராயுங்கோள் படைவகுத்து
ஆயுதமெடுத்துமேபாயுங்கள்
புவியும்நடுநடுங்க பூட்டுங்கள்பாணத்தை
பூபன்மணிமாலனைக் கொன்றவன்தன்னைவெல்வேன் அப்

என்னகெடுமதிநேர்ந்தது அவன்
சின்னப்படவும்காலம்சேர்ந்தது
மன்னர்மன்னவர்களும் வையகத்தரசரும்
கண்டுளனைப்பணியுங் காரணமறியாமல் அப்





குபேரன் கவி

முடிகியேசேனைதன்னை முன்னும்பின்னறிந்திடாமல்
துடிக்கவேமடித்தாயுந்தன் சூரத்தைத்திரமாயெண்ணி
பிடிக்கவேயறுத்துவந்தேன் பெருங்கோபத்துடனேயானும்
மடிக்கவுந்தனுவெடுத்தேன் வல்லுயிர்பிழைத்திடாயே.

வசனம்

அடா வாடா மானிடனே! வடக்குதிசைக்கு அதிபதியென்று சற்றுவது மதிப்பில்லாமல் என்னுடைய சேனைகளை கொன்றுயல்லவா? இதோ நான் ஆயுதம் எடுத்துவந்தேன், யுத்தம்செய்ய எதிர்த்துவாடா மானிடப்பயலே.

வீமன் தரு

கெடிபெறவந்திடும்பாவியோ என்னை
கெலிக்கவந்தாயெதிராளியோ

சருள் மடிக்கசேனையை வாட்டுவேன்
மகிழ்ந்துவீரியங் காட்டுவேன்
படியச்சரங்களை பூட்டுவேன்
பம்பரம்போலவே ஆட்டுவேன் கெடி

குபேரன் தரு

காட்டினிற்காய்கனிபுசித்திடும் பயலே
கணைவிட்டுக்கொன்றுரசித்திடும்

சருள் ஓடஓடவே தாக்குவேன்
ஒருகரத்தினால் தூக்குவேன்
வாடவேவுயிர் போக்குவேன்
மதமுடன்நீ ரூக்குவேன் காட்

வீமன் தரு

அழிவுக்காலமும்வந்ததறியாமல் மூடா
ஆண்மையும்சவுரியமும்தெரியாமல்

சருள் இழிவுபேசியே துள்ளாதே
இப்படிநீமதம் கொள்ளாதே அழி

குபேரன் தரு

எளிதம்எண்ணியேவந்தைபோ இங்கு
ஏகனைவந்திடும்விந்தைபோ

சருள் தூளிபடலமாய்ச் சாடவே
சூரமகிழ்ந்துநீ ஓடவே
கூளிகழுருகள் ஆடவே
கொடியசரமிதோ போடவே எளி

வேறு வீமன் தரு

கெட்டகேவலமான கெடுதிகள்வந்திட
கிட்டிவாட்டிமடிப்பேன் உன்னையிப்போ
எட்டிசிரத்திலிடிப்பேன்

தேவதேவர்களாலும் ஜெயிக்கவொண்ணுதென்னை
தீரமுடனேவந்த வீரமறிவேன்போடா கெட்

குபேரன் தரு

மடிவதினியேது மணிமாலனைப்போலே
மடிவனுன் என்றுநீவிள்ளாதே இப்போ
சுடுகெண்டைபோலவேதுள்ளாதே

நட்டணையாகவே ஞாயங்கள்பேசாதே
துஷ்டனேஉனைக்கொல்ல துண்டினேன்சரமிதோ மடி

வீமன் தரு

சொல்லுவதேதநீ வல்லமைபேசுறாய்
கொல்லாமல்கான்விடுவேனோ குபேராகான்
வல்லமையுங்கெடுவேனோ

தத்தியுன்சிரமதை இத்ததிதுணித்திட
கத்திசூலம்வேலும் மெத்தஎடுத்துவிட்டேன் கொ

குபேரன் கந்தார்த்தம்

முன்னமேமணிமாலன்தான் முடிந்துமேபோனனென்று
சின்னமேபேசவந்தாய் சிவன்பாதம்மறவாசீலன்
என்றுநீதெரிந்திருந்தும் இவ்விடம்வந்தவீணாய்
மண்ணினில் மடியக்காலம்,

குபேரன் தரு

வந்துதோவீமா நான்விட்டகணை
நொந்துதோசோமா

வன்னிமழுவாள்சூலம் வாள்கடகமுங்கொண்டு
சென்னிபூமியில்வீழ சின்னபின்னங்கள்செய்தேன் வந்

பொது வசனம்

இவ்விதமாக குபேரனால் வீமன் அடிபட்டு பூமியில் மூர்ச்சித்து விழுந்தான். கானகத்தில் இருக்கிற பாண்டவர்களில் மூத்தோனாகிய தருமராஜன் வீமசேனனைக் காணோமென்று துரோபதையும் மற்ற தம்பியரையும் பார்த்துச் சொல்வது.

தருமர் கவி

அறிவுள்ளதம்பிமார்கள் அனைவருமிங்கிருக்க
திறமுள்ளவீமனேற்குச் செப்பிடதெற்கேசென்றான்
அடவியில்வந்தகாளாய் அனேகமாமிடர்களுண்டு
திடமதாயெங்குசென்றான் தெரிவிப்பாயெனக்குத்தானே.

தருமர் வசனம்

கேளுங்கள் எனது தம்பிமார்களே! பெண்ணே துரோப்தா! என் தம்பியாகிய வீமசேனனை இவ்விடத்தில் காணோம், எவ்விடம் சென்றான் தெரியச்சொல்லும் பெண்ணே பாஞ்சாலி.



துரோபதை கவி

இங்கிதமாகப்பேசும் என்னுடபிராணநாதா
மங்களப்பாரிஜாத மலர்பறித்துவாயென்றேன்
திங்களின்முகத்தினுளே சீக்கிரந்தருவேனென்று
தங்களின்தம்பிசென்றூர் சமாச்சாரமிதுதானையா.

துரோபதை வசனம்

சரணம் சரணம் எனது பிராணவல்லபா! நான் மந்தாரை புஷ்பம் வேண்டுமென்று அவருடனே சொன்னேன், நான்கொண்டு வந்து தருகிறேனென்று சொல்லிப் போய்விட்டாரையா சுவாமி.

தருமர் கவி

எங்கையோசென்றுன்காணேன் இவ்விதிக்கென்னசெய்வேன்
மங்கையாள்செப்பதெல்லாம் வருத்தமேவிளையுதிங்கே
சங்கையென்சகாதேவாநீ சாஸ்திரம்பார்த்துத்தம்பி
பொங்கமாயெர்தனுக்கு பூரிப்பாயுரைத்திடாயே.

தருமர் வசனம்

ஐயோ தெய்வமே! இந்த துரோபதையினாலே இப்பேர்க்கொத்த அபாயம் நேர்ந்ததேயல்லாமல் அவன் எவ்விடம்சென்று யாருடன் சமர் செய்கிறானோ, எவருடைய கையினால் இறந்துவிட்டானோ தெரியவில்லையே. தம்பி சகாதேவா! உன்னுடைய சாஸ்திரத்தை நன்றாகச் சோதித்துப் பார்த்துச் சொல்ல வேண்டுமப்பா சகாதேவனே.

## சகாதேவன் தரு

சாஸ்திரம் சொல்லுகிறேன் கேள் எனது அண்ணா
சாஸ்திரம் சொல்லுகிறேன் கேள்

நேர்த்தியாய்மந்தாரைப் புஷ்பத்தைவேண்டியே
நோய் அளகைநோக்கித் தாராளமாய்ப்போக சா

அனுமானைநேரிற்கண்டு அநேகசினேகங்கொண்டு
அந்த அளகைகோட்டை அதிகாரிதனைக்கொன்று சா

ஆனைசேனைகள் தன்னை வென்றுருகுபோன்கையில்
நாணிமூர்ச்சையடைந்து நலமுடன்கிடக்கிறார் சா

## தருமர் கவி

என்னதான்செய்வேனையோ ஈசனார்செயலிதாமோ
நன்மையைவிட்டுநாங்கள் நாடழிந்தலைந்தோமையா
பண்ணியவினையுமிப்போ பறந்துமேபோகவில்லை
முன்செய்தவினைதானிங்கு மூண்டுதோஎன்னசெய்வேன்.

## தருமர் வசனம்

ஐயையோ தெய்வமே! எங்கள் தலைவிதியினால் நாடு இராச்சியங்களைவிட்டு அடவியில்வந்தும் எங்களைப்போல் திரிந்து இப்போர்க்கொத்த துன்பம் வரலாச்சுதே, என்னசெய்வேன் தெய்வமே.

## தருமர் தரு கண்ணிகள்

ஐயையோநான் என்னசெய்வேன் அங்கம்பதறுதே
அறியேனே ஒன்றுந்தெரியேனே

அன்றுசூதாடியே இவனுவிட்டெங்களை
ஓட்டினான் காட்டைக்காட்டினான் ஐயோ

இதுவோதலைவிதி என்றுமேநாங்கள்
எண்ணினோம் மனங்குண்ணினோம் ஐயோ

அஸ்தினாபுரத்தைவிட்டு அடவியெல்லாமலைந்து
வந்தோமே தெய்வத்தைநொந்தோமே ஐயோ

ஏழையைப்போலவே ஏழாண்டுவனத்தினிற்
றலைந்தோமே தேகங்களைத்தோமே ஐயோ

எண்ணியெட்டாண்டினில் இந்தவனத்துக்கு
வந்தோமே மனம்நொந்தோமே ஐயோ

வந்தயிடத்திலில் வகைமோசமாகவே
வந்துதே மனம்நொந்துதே ஐயோ

எதினலெங்களுக்கு இந்தபழிகள்வர
லாச்சுதே தேகம்போச்சுதே ஐயோ

மாதுமலரைக்கேட்க மதவீமனளகைக்கு
சென்முனே அநேகரைக்கொன்முனே ஐயோ

அக்கிரமஞ்செய்ததால் அளகைக்குபேரனும்
அடுத்தானே தம்பியைக்கெடுத்தானே ஐயோ

இந்தத்தம்பியருடன் எதுக்குநான்வந்து
பிறந்தேனே உலகில்துறந்தேனே ஐயோ

இந்தக்கொடுமைகள் எப்படிமுடியுமோ
நேசனே வைகுந்தவாசனே ஐயோ

### தருமர் கவி

கர்த்தனேமாயாரூபா கமலபொற்பாதாபோற்றி
நித்தியமைவர்தன்னே நிலையுடன்காப்பாய்போற்றி
அத்தனேயெனதுதம்பி அளகையில்மடிந்துபோனன்
சித்தமுங்கலங்குதையோ ஸ்ரீஹரியென்னசெய்வேன்.

### வசனம்

அரிஹரி! ஆபத்பாந்தவா! அனுதாரக்ஷகா! என் தம்பியாகிய வீமசேனன் அளகாபுரியில் சாவுக்குச் சமானமாகிய மூர்ச்சையடைந்துவிட்டானே இதற்கு என்னசெய்வேன் கர்த்தனே.

### தருமர் தரு

தேவாமகானுபவா திருவடிதனையென்றும்
சிந்தைவைத்தே துதிக்கும்
சிறியேனை வந்துகாரும் தேவா

அன்றுயானையைக்காத்த ஆதிமூலப்பொருளே
அடியேன் படுந்துயரம்
அகற்ற இக்கணம்வாரும் தேவா

மங்கைதுரோபதையினல் மலர்கொய்யச்சென்றவீமன்
வடதிசைக் குபேரனல்
மடிந்தான் என்னசெய்வேன் தேவா

இந்தவேளையில்வந்து எங்கள் துயரைநீக்கி
இருப்பிடம் நோக்கியே
ஏகுவீர் வைகுந்த தேவா

அன்றைக்குமின்றைக்கும் என்றைக்குங்காப்பேனென்றும்
அபயாஸ்தம் தந்தவா
அரிமுகுந்தா கோவிந்தா தேவா

பொது வசனம்

இவ்விதமாக தருமராஜன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைத் தோத்தரிக்க, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கொலுவுக்கு வருவது.



கிருஷ்ணன் கவி

அச்சுதானந்தரூபன் அலைகடலமர்ந்தமூர்த்தி
உச்சிதமானசீலன் ஒங்குலட்சுமியாள்லோலன்
பட்சமாயுலகிலுள்ள பக்தர்கட்குகந்ததேவன்
விச்சித்திரமானகிருஷ்ண தேவரும்வருகின்றாரே.

கிருஷ்ணன் தரு

மதிக்கும் உலகமெங்கும் துதிக்கப்பிரதாபம்பெற்ற
மதிசூதனனும்நானே ஸ்ரீகிருஷ்ணதேவ
மாயவதாரனும்வந்தேனே

பதிக்குளேணைப்பகைத்த விதிக்குமுடிவதான
பாரிலரக்கர்களை வேருடனேகெடுத்த மதி

சுருள் பத்தனும்நானே சிவனுட
மைத்துனன்நானே

பத்தியாய்த்தொழுதோரை எந்தேசகாலமும்
சித்தமகிழ்ந்துமனம் வைத்துமேகாப்பேன் மதி

அன்றுதேவராசுரர் அமுதம்வேண்டுமென்றதால்
நின்றுகடலைக்கடைந்து நிமிடத்திலமுதந்தந்தேன்

சுருள் அம்மானைவென்றேன் பூதகி
அலகையைக்கொன்றேன்

வாழும்மாபலியிடம் மூன்றடிதானமாய்
தாழும்படிக்குமுன்னே வாமனமாகினேன் மதி

அன்றயன்வேதத்தை அலைகடலிலொளித்த
ஆங்காரசோமுகா சூரன்தனைவதைத்தேன்

சுருள் அன்பனும்நானே பக்தர்க்கு
இன்பனும்நானே

அண்டபுவனமும் குக்ஷிக்குள்வைத்தேன்
அலைகடல்தன்னிலே அமுதமுங்கடைந்தேன் மதி

சொல்லும்இரணியனும் என்னைப்பகைத்ததினால்
தூணிலநரசிங்கமாய் தோன்றியுடல்கிழித்தேன்

சுருள் துய்யனும்நானே பணிபவர்
மெய்யனுமநானே

துண்டதாடகையை தண்டனைசெய்தேன்
கொண்டல்ராவணனை மண்டையைக்கொய்தேன் மதி

வாமனரூபமாகி வந்து அடியளந்தேன்
பூமியிலவாலியுயிரைப் போக்கும்படிசெய்தேன்

சுருள் புண்ணியனுனேன் காமக்
கண்ணியனுனேன

பூமியில்சூரிய குலமதைஅழித்திட
நயமதாய்ப்பாசு ராமனுமானேன் மதி

கிருஷ்ணன் கவி

மாதவருலகந்தன்னில் மறைமுதலடியாரெல்லாம்
போதவேக்ஷேமமாகப் பொருந்தியேவாழ்கவேண்டும்

வேதியாம்வீமனுக்கு வினையின் றுவந்ததாலே
சேதிதான்சொல்லஎன்னை சீக்கிரம்நினைத்திட்டாரோ.

வசனம்

கேளும் பிள்ளாய் மாதவா! அண்டபிண்ட சராசரங்களும் ஆகமம் வேத சாஸ்திர முதலானதும் வாழ்ந்துவருவது மல்லாமல் நமது அடியார்களும் க்ஷேமம் பொருந்தி வாழக்கடவது. மேலும் அஸ்தினபுரியை அரசுசெய்துவராநின்ற துரியோதனன் கபடவஞ்சகத்தால் பாண்டவர்களுடன் சூதாடி நாடு இராஜ்ஜியங்களை அபகரித்துக்கொண்டு பனிரெண்டுவருஷம் வனவாசம் அனுப்பிவிட்டபடியால் இப்போது நம்மை யாதோ ஒரு காரியார்த்தமாக நம்மை நினைத்து துதிசெய்துகொண்டார்கள். அதை நாம் அறிந்துவரத் தக்கதாக போகவேணும். நமது வாகனமாகிய கெருடன்மீதில் ஏறிக்கொண்டு போகவேண்டுமடா மாதவா.

கிருஷ்ணன் தரு

ஐவரைக்காக்கவே ஆயன்மனதிலெண்ணி
அன்புடன்தானடந்தார் கானகம்நோக்கி
தென்புடன்தானடந்தார்

துன்பம்வந்தணுகாமல் துயரைத்தீர்ப்பேனென்று
சுருள் துரிதமாகவே கெருடனேறியே
நெறிதவறுமலே திரமதாய்சீறியே ஐவ

வட்டமானகெருட வாகனமீதிலேறி
அட்டகெஜமநடுங்கவே இந்திரதேவர்
திட்டமுடனெருங்கவே

எட்டுதிசைகளெல்லாம் குக்ஷிக்குள்வைத்துகாக்கும்
சுருள் இன்பமதாகவே நின்றுமேஅனைவரும்
அன்புடன்தொழுதுமே அடிதனிற்பணிந்துமே ஐவ

வனத்தினில்வாழ்முனிவர்கள் வந்துவணங்கிபோற்ற
மனதில்மகிழ்வுகொண்டுமே ஐவர்கள்தானும்
நினைத்தமனதைக்கண்டுமே

கனவரந்தானளித்து கண்டுதுயரொழிந்து
சுருள் காடியும்மிருகமும் கண்டுகளித்திட
திறமுடன்பக்ஷிகள் நிழலதுதருக ஐவ

## தருமர் தரு

சரணம் சரணமையனே ஸ்ரீஜகந்நாதா
சரணம் சரணமையனே

கருணைகரப்பொருளே கமலபொற்பாதத்தை
கருத்தில்மிகவுங்கொண்டு நிறுத்தினேன்சிரசின்மேல்

சுருள் கண்ணனேமுகில் வண்ணனே அரி
என்னும்எங்களை ரக்ஷித்தருள்வீர் சர

தாமோதரா ஹரியே சர்வலோக
தயாபர முராஹரியே

வாமனரூபனே வசுதேவன்பாலனே
பூபனேஸ்ரீராமா புண்ணியசீலனே

சுருள் போதனேஜெய நாதனே என்
வேதனையெலாம் தீர்த்துரக்ஷியும் சர

சட்செவிதுயில்வோனே கெருடனெனும்
பட்சிமேல்வருவோனே

லட்சுமிநேயன் இலங்கையைவென்றோனே
இட்சணமெங்களை இன்பமாயாதரி

சுருள் ஏகனேநீல மேகனே அரி
நாகசயனனே ரக்ஷித்தருள்வீர் சர

அச்சுதகோவிந்தனே உலகமெச்சும்
உச்சிதமானநாதனே

பச்சைமேனியனே பாரளந்திட்டதேவா
மைத்துனன்வீமனுக்கு வந்தவினையைத்தீர்க்க

சுருள் மண்ணையுண்ட கண்ணனேமணி
வண்ணனேதினம் எண்ணியேழையேன் சர

## கிருஷ்ணன் கவி

தர்மமேஜெயமென்றெண்ணும் தலைவனேவாழிவாழி
நன்மையதாகவிப்போ நாடியேயினைத்ததென்ன
இம்மையிலுங்களுக்கு இடறதுவந்ததுண்டோ
செம்மையதாகநீரும் சீருடனுரைசெய்வீரே.

### வசனம்

கேளும் தருமபுத்திர மகாராஜனே! நீங்கள் சுகமாக வாழ்கக் கடவது. துவாரகாபுரியிலிருந்த என்னை இவ்விடம் வரவழைத்த

காரணமென்ன? உன்னுடைய முகாரவிந்தமாகப்பட்டது மலர்ந்த செந்தாமரைப் புஷ்பம்போல் இராமல் வாடியிருக்கவேண்டியது என்ன? சொல்லும் எனது மைத்துனராகிய தருமபுத்திர மகா ராஜனே.

தருமராஜர் கவி

மாயனேஎன்னசெய்வேன் மங்கையும்மலரைக்கேட்க
ஆயனேவீமன்றானும் அன்புடனளகைக்கேக
நேயனேகுபேரன்கண்டு நிமிடந்தன்பாணத்தாலே
காயமேமூர்ச்சையாகக் களைத்திடச்செய்தானையோ.

வசனம்

சரணம் சரணமையா சுவாமி லோகநாயகா! துரோபதையான வள் மந்தாரைபுஷ்பம் கேட்க, எனது தம்பியாகிய வீமசேனன் தரு கிறேனென்று சம்மதித்து அளகாபுரிக்குச் சென்றான். அவ்விடத் தில் மணிமாலன் முதலாகிய அநேக சேனைகளைக் கொல்ல, அது தெரிந்து குபேரன்வந்து என் தம்பியாகிய வீமசேனனை மூர்ச்சை விடச் செய்தானென்று தெரியவந்தது. ஆகலால் உம்மை நினைத் தேனையா சுவாமி.

கிருஷ்ணன் தரு

ஐயோவிதென்னகாலமோ வீமனை
அடித்துமடித்தவன் அதிபலவானுச்சே
ஐயோவிதென்னகாலமோ

செய்தவினையினாலே சீமைபூமியைவிட்டு
சுருள் சிருடனிருக்கவும் காரணமில்லையே
வேருடன்நீங்கலும் மாளவுந்தொல்லையே ஐயோ

தருமர் தரு

ஏதோமாயமாய்பேசுநீர் இப்போ
தெங்களைக்கார்த்திட மங்களமார்பனே
ஏதோமாயமாய்ப்பேசுநீர்

வாதையுமக்குண்டாமோ மனதெங்கள்மீதில்வைத்தால்
சுருள் மைத்துனவீமனை இத்தருணந்தன்னில்
வெத்தியாயெழுப்பவும் சித்தம்வைத்தருள்செய்வீர் ஏ

கிருஷ்ணன் தரு

என்னஒய்தர்மபூபனே நீர்
ஏங்கியேவாடுநீர் தீங்குகள்நேர்ந்தபின்
என்னஒய்தர்மபூபனே

முன்னேசிவன்செயலும் முடிந்ததிப்படியாக
சுருள் முற்றிலும்நீயுமே கற்றதுமோமழையே
சுற்றியவினையது பற்றிடாதேகுமோ என்

தருமர் தரு

தேவாவுன்பாதம் சரணம் சரணம்
தெரியாமலேசிறுவன்செய்த பிழையைப்பொறுத்து
தேவாவுன்பாதம்சரணம்
மூவர்பொறுத்ததை முன்னின்றுகாக்கவேணும்
சுருள் முன்னமோராணையை பின்னமில்லாமல்கார்த்தாய்
அன்னைபிதாவென்று உன்னையேநம்பினேன் தேவா

கிருஷ்ணன் தரு

பிழைவந்துநேர்ந்ததுவே என்
பிரியமைத்துனரே தெரியவேகேளும்
பிழைவந்துநேர்ந்ததுவே
பழியுந்துரோபதைமீது பகரப்படைத்தானே
சுருள் பாண்டவரேபிது ஆண்டவனருளோ
நீண்டொணு ஆலேவாய் மீண்டுந்திரும்புமோ பிழை

தருமர் தரு

அத்தனாருளிதுவோ ஓய்
ஆதியேநீரென்னை சோதனைசெய்கிறீர்
அத்தனாருளிதுவோ
கர்த்தனேநீரல்லாமல் கடவுளுலகிலுண்டோ
சுருள் காரணமாகவே நாரணுபேசுமீர்
வாரணங்காத்தவா பூரணகர்த்தனே அத்த

கிருஷ்ணன் தரு

கர்த்தனுனென்றுசொல்கிறீர் இந்தக்
காரணம்நேர்ந்ததும் நாரணனருளே
கர்த்தனுனென்றுசொல்கிறீர்
சுத்தமாய்நானிப்போ சொல்லும்வசனங்கேளும்
சுருள் சூரரும்வானவர் யாவர்க்குமெதிரில்லா
வீரன்குபேரனை வெல்லுவாரில்லையே கர்த்

தருமர் தரு

வெல்லுவதுமக்குஅரிதோ நீல
சாமளவர்ணனே கோமளவர்ணனே
வெல்லுவதுமக்குஅரிதோ

கல்லைப்பெண்ணாக்கினன்று வெல்லவர்தஞ்சூரரை
சுருள் கண்டுமேஅவர்களை அண்டருலகம்சேர்த்தீர்
தண்டனைசெய்துமே தொண்டரைக்காத்தீர் வெல்

கிருஷ்ணன் தரு

காப்பதும்அரிதாகுமே திரு
மூவரும்எதிரில்லாக் குபேரனையேபகைத்தீர்
காப்பதும்அரிதாகுமே

கயிலையங்கிரிவாசன் குபேரன்சிநேகனுச்சே
சுருள் காண்டீபம்யெடுத்துமே தாண்டியேபோவது
பாண்டவர்களேயிப்போ ஆண்டவன்பகைவரும் காப்

தருமர் தரு

பகைவருமென்றுசொல்கிறீர் என்
மனதைமிரட்டியே நினைவதில்நீருமே
பகைவருமென்றுசொல்கிறீர்

மாயவரேஐவர்க்கும் மைத்துனர்நீரிருக்க
சுருள் இன்னமும்வேறே அன்னியருண்டோ
வன்னமார்துகிலை முன்னமேஅளித்தீர் பகை

கிருஷ்ணன் கவி

காருமே யென்றுசொன்ன தருமபூபா
கைநழுக விட்டதுண்டோ உங்களைத்தான்
பாருமென்று தந்திரங்கள் செய்தேன்யானும்
பாண்டவர்க ளேநீங்கள் பயப்படாதீர்
சீருடனே அளகைபுரி நோக்கிச்சென்று
சிறப்புடனே குபேரனையும் கண்டுயானும்
வீருடனே மந்தாரை மலரைக்கொண்டு
வீமனையு மெழுப்பிடுவே னெழுந்திடீரே.

வசனம்

கேளும் எனது மைத்துனராகிய தருமபுத்திரமகாராஜனே! இந்தக்ஷணம் நாமனைவரும் அளகாபுரிக்குச்சென்று துரோபதை இச்சித்த மந்தாரை மலரையும் வாங்கிக்கொண்டு குபேரனால் சாவுக்குச் சமானமாக அடிபட்டு மூர்ச்சித்து பூமியில் விழுந்திருக்கும் வீமசேனனையும் எழுப்பி அழைத்துக்கொண்டு வருவோம் வாரும் பாண்டவர்களே.

கிருஷ்ணன் தரு

மைத்துனன்மார்களே தங்கையேதுரோபதா
வாருங்கள் அளகைக்குத்தானடப்போம் வலம்
வாருங்கள் வேடிக்கையாய்நடப்போம்

தருமர் தரு

காவலாயெங்கனை கங்கணங்கட்டி
காமனையின்றவா கார்த்திடுவீர் தம்பி
வீமனுயிரைக் காப்பாற்றிடுவீர்

கிருஷ்ணன் தரு

வடதிசைக்குப்போனான் அந்தமணிமாலனை
வதைசெய்தான் உன்தம்பிமதவீமன் ஏமன்
பதிசென்றான் அவனால்சித்திரலோலன்

தருமர் தரு

தளகர்த்தர்சேனையும் மணிமாலனும்மாண்டான்
தம்பிமூர்ச்சையான விடமெங்கையோ இப்போ
கும்பலாய்க்காணுதே பிணமெங்கையோ

கிருஷ்ணன் கவி

அறமிதுமிகுந்துவோங்கும் அரசனேசொல்லக்கேளீர்
திறமணிமாலனோடு திரளானசேனைமாண்டார்
குறையெனக்கேளவியாகி குபேரனுஞ்சமர்களசெய்து
பறைதலாய்வீமன்றானும மடிந்துமேகிடக்கின்றானே.

வசனம்

கேளுங்கள் பாண்டவர்களே! மணிமாலனோடு குபேரனுடைய சேனைத்தலைவன் இனனம அனேகர் மடிந்திருக்கிறார்கள. குபேரனால் மூர்ச்சையடைந்து உனதமபியாகிய வீமசேனன அதோயிருக்கிறான பாரும் தர்மராஜனே.

தருமர் கவி

அரகாரகாளகண்டா ஆதியேஅந்திவண்ணா
திரமுளபிரமதேவன தேடியேயெழுதினான்
வடகயிலாசநாதா வந்துமேகார்க்கொணாதோ
திடமுளவீமசேனா தீரத்தையெங்கொளித்தாய்.



வசனம்

அரகரா! காலகண்டா! திரிநேத்திரா! கயிலாசகிரிவாசனே! எனது அருமைத்தம்பியாகிய வீமசேனன் குபேரனால் சாவுக்குச் சமானமாகிய மூர்க்சையடைந்தான் என்னசெய்வேன் தெய்வமே.

தருமர் புலம்பல்

கண்ணிகள்

ஐயையோநான் என்னசெய்வேன்
அலருதையோ எந்தன்மனம்
ஒய்யாரமானபெண்ணால் ஓடிவந்தான்வீமசேனன்

கோட்டைவாசற் காவலனை
கொன்றுவிட்டா னென்றுசொல்லி
வாட்டமாய்குபேரன்வந்து வாடச்செய்தான்என்னசெய்வேன்

ஆதிநாளின் குறையிதுவே
அடவிதன்னில் வந்திருந்தும்
மாதுபெண்ணால்இங்குமாள மங்கைபாகன்விதித்தாரையோ

பூமியளந்ததேவா
பூதகிபா லுண்டநாதா
மாமனைவதைத்தமாலே மாண்டவீமன்சேதிகேளீர்

அரக்கு மாளிகையிலெங்கள்
அனைவரையுங் கார்த்தானையா
அரக்கனாந்தஇடும்பன்தன்னை அழித்துவிட்டானெந்தன்தம்பி

ஆதிநாள் தூரியன்செய்த
அரும்பிழைகள் தப்பவைத்தான்
சேதிஒன்றுங்காணேனையா செங்கண்மாலேஎன்னசெய்வேன்
ஐயையோ நானென்ன செய்வேன்

கிருஷ்ணன் கவி

தம்பியுமடிந்தானென்று தவித்துநீபுலம்பவேண்டாம்
உம்பர்வாழுலகஞ்சென்று உன்தம்பிவுயிர்தானிப்போ
எம்பிரானருளினாலே எழுப்பினேன்வீமன்றன்னை
கும்பலாய்வனமேசென்று குணமுடன்வாழ்ந்திடீரே.

வசனம்

கேளும் தருமபுத்திர மகாராஜனே! உன் தம்பியைக் குறித்து விசனப்படவேண்டாம். இதோ மூர்ச்சையை தெளிவித்து உன் தம்பியை எழுந்திருக்கும்படி அனுக்கிரகம்செய்தேன். இதோ வீமசேனன் எழுந்துநின்றான் பாரும் மகாராஜனே

வீமசேனன் சொல் கவி

வராகவதாரவேந்தன் மைத்துனபோற்றிபோற்றி
தராதலம்புகழுமெந்தன் தமையனேபோற்றிபோற்றி.

பொது வசனம்

அகோதெப்படியென்றால், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் பாண்டவர்களும் துரோபதாதேவியும் அளகாபுரிக்கு வந்து சேர்ந்தபோது கிருஷ்ணமூர்த்தியினுடைய கிருபா கடாக்ஷத்தினால் வீமசேனன் மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து ஒருவர்க்கொருவர் க்ஷேமலாபங்களை விசாரித்திருக்கும்போது இதுகளை தூதர்களால் கேள்விப்பட்டு குபேரன் அவ்விடம்வந்து சொல்லுகிறவிதங் காண்க.

குபேரன் சொல் கவி

அக்கிரமம்கொண்டவீமன் அடிபட்டுமாண்டசேதி
திக்கினிற்கேள்வியாகி தேவகிபாலன்கூடப்
பக்குவமுடனேபாண்டு மைந்தர்கள்சூழவேதான்
இக்கணமிங்குவந்தான் இதற்குநாமென்னசெய்வோம்.

குபேரன் வசனம்

கேளும் மந்திரிமார்களே! வீமசேனன் மூர்ச்சையான சங்கதி பாண்டவர்க்கு கேள்வியாகி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையும் அழைத்துக்

கொண்டுவந்து நம்மால் அடிபட்டு மூர்ச்சையாக விழுந்துகிடக்கும் வீமசேனனை மூர்ச்சை தெளியவைத்து என்னமோ யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். கிருஷ்ணன் வந்திருப்பதை யோசித்தால் நமதுபேரில் படையெடுத்து சண்டைக்கு வருவதுபோல் ஏற்படு கிறது. அப்படி அவர்கள் சண்டைக்கு வாராமுன்னமே நாம் எதிர் சென்று அவர்களை சமாதானப்படுத்திக்கொள்ளுவோம் வாருங்கள் மந்திரிமார்களே.

குபேரன் தரு

சரணம்சரணமையனே தேவகிபாலா
சரணம்சரணமையனே

தருணமதிலேயிங்கே தானும்பாண்டவர்களும்
கருடவாகனமேறி வந்ததுரைசெய்வீர்

கிருஷ்ணன் தரு

அளகாபுரியாளும் குபேரபூபா
அதிபெலமானதீரா

தளமுடனேவந்து தருமர்தம்பிவீமனை
வனமாய்கானகத்தில் மடித்தகாரணமென்ன அ

குபேரன் தரு

கோட்டைக்கதிகாரி மணிமாலனை
கொன்றான்மதவீமனும்

வாட்டமுடன்மடித்து வந்தசேனையைவென்றான
தாட்டிகமிதுவலல தனஞ்செயனமைதனுணு கோ

கிருஷ்ணன் தரு

கொன்றான்மணிமாலனை வீமசேனன்
வென்றான்மணிமாலனை

வென்றான்பக்காசூரனை வீரனுவகிசகனை
அன்றிடுயபன்சரா சநதனை தரிதமாய கொ

குபேரன் தரு

இந்தவிதங்காணேன் கிருஷ்ணதேவா
இந்தவிதங்காணேன்

அந்தவீமனுடனே அடுத்துசமர்கள்செப்தேன்
இந்தபிழைபொறுத்து என்னைகார்த்துரக்ஷியும் இ

கிருஷ்ணன் கவி

வடதிசைபாண்டமன்னு வாட்டமுமுனக்குவேண்டாம்
திடமுளவீமன்ருனும் தீரமாய்கினைத்துவந்த
மணமுளபாரிஜாத மலரையுந்தந்துநீரும்
குணமுளஐவர்தன்னை கூட்டியேஅனுப்பிடாயே.

வசனம்

கேளுமப்பா குபேரா! வீமசேனன் நாடிவந்த மந்தாரை புஷ்பத்தை தருமராஜரிடம் கொடுத்து அனுப்பிவையும் குபேரதீரா.

குபேரன் தரு

இந்த உலகிலுள்ள
மந்தாரை மலர்தன்னை
எப்படி யீவேனுன்
ஈசாவைகுந்த வாசா இந்

கிருஷ்ணன் தரு

அளகாபுரி யாளும்
அரன்றன் சிநேகிதனே
மதங்கொண்ட வீமனை
மாய்த்தேனென் றெண்ணுதே அள

குபேரன் தரு

மாய்த்துவிட்டே னென்று
மதங்கொள்ள வில்லைநானும்
விமலிபாகன் தந்த
விருக்ஷத்தைத் தருவேனே மா

கிருஷ்ணன் தரு

நீதருகா விட்டால்
நீரிற்பிறந்த மாது
நினைத்தால் பற்றிக்கொள்ளும்
நீனிலம் எங்குமே நீ

குபேரன் தரு

அனலாகும் என்றுசொல்லி
ஆதிமாயனே சொன்னீர்
க்ஷணமதில் மந்தாரை
புஷ்பத்தை தந்துவிட்டேன் அன

### கிருஷ்ணன் கவி

மந்தாரைபுஷ்பந்தன்னை வடதிசைகுபேரன்தந்தான்
விந்தைபாஞ்சாலியும் கோவிந்தனுமைவரொன்றாய்
வந்தனராளகைவிட்டு வழிகடந்தவர்களெல்லாம்
அந்தமாய்ப்பர்ணசாலை அமர்ந்தனராரியினோடே.

### வசனம்

அகோதெப்படியென்றால் இப்படியாக குபேரன் மந்
மலரைத் துரோபதையம்மனுக்குத் தந்தவுடனே ஸ்ரீகிருஷ்ண
தியும் பாண்டவர்களும் ஆரண்யம் வந்துசேர்ந்து மறுப
கிருஷ்ணமூர்த்தியானவர் துவாரகாபுரிக்குப் போய்ச் சேர்
பஞ்சபாண்டவர்களும் பாஞ்சாலியும் கானகத்தில் சுகமாகச்
சரித்து யிருக்கிறவிதங் காண்க.

### வாழி விருத்தம்

மங்கைமா தேவருடன் வானோர்வாழி
வாழியிஷ்ட பாரியொடு மாயன்வாழி
பங்கயத்தோன் வாழியவன் பாவைவாழி
பாண்டவர்கள் வாழிபாஞ் சாலிவாழி
எங்குமுள்ளோர் வாழியிந்த நாடகத்தை
இசையாகப் படிப்பவரென் னாளுய்வாழி
துங்கமுள்ளோர் வாழியின்னால் அச்சிலிட்ட
மலர்மகள் விலாசம்பிரஸ் வாழிதானே.

மணிமாலன் சண்டை நாடகம்
முற்றுப் பெற்றது.

---

மலர்மகள் விலாசம் பிரஸ், சென்னை-1. (9-8-66)